# புத்தக விபரம்

| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | **வழிகேடர்கள் நிராகரிக்கும் ஹதீஸ்கள்** |
| ஆசிரியர் | : | M. அப்துர் ரஹ்மான் மன்பஈ |
| முதற்பதிப்பு | : | மே 2014 |
| பதிப்புரிமை | : | ஆசிரியருக்கு |
| பக்கங்கள் | : | 64 |
| விலை | : | ரூ. 35.00 |
| அச்சமைப்பு | : | ஸ்ரீ ராகவேந்திரா பிரிண்டர்ஸ்<br>சென்னை – 600 005<br>செல்: 90031 81586 |
| அச்சிட்டோர் | : | கிராஃபிக் பார்க், சென்னை – 600 005 |
| நூல் வெளியிடுவோர் | : | **புளூ மூன் மீடியா**<br>1/1, கொய்யா தோப்புத்தெரு,<br>புதுப்பேட்டை, சென்னை –600 002.<br>செல்: 9791696134 |
| கிடைக்குமிடம் | : | அமீன் பப்ளிகேஷன்<br>256, தெற்கு மாரட்வீதி<br>மதுரை – 1.<br>செல்: 9566502480 |



# பதிப்புரை

அளவில்லா அருளும் நிகரில்லா அன்பும் கொண்ட இறைவனின்

இனிய திருநாமம் போற்றி...

தங்களின் கைகளில் தவழும் இச்சிறு நூல் "அல்ஜன்னத்" இஸ்லாமிய மாத இதழின் தொடர் கட்டுரையில் வந்த தொகுப்பாகும். (மே 2013 - ஜனவரி 2014). தொடராக வெளிவந்த போது பலருக்கும் பயன் தருக்கூடியதாக இருந்ததால், சத்தியத்தை எத்திவைக்க வேண்டும் என்ற ஆர்வமுள்ள சகோதரர்களின் விருப்பத்திற்கு இணங்க இது நூலாக வெளிவருகிறது.

இவை சகோ - "தொண்டியானி" என்ற ஜைனுல் ஆபிதீன் தனது திருக்குர்ஆன் மொழிபெயர்ப்பில் (விளக்க குறிப்பு எண் 357ல்) நிராகரித்துள்ள ஹதீஸ்களாகும். நபி (ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டது குறித்த ஆதாரபூர்வமான ஹதீஸை நிராகரித்து அதற்கு வலு சேர்க்க மேலும் நான்கு ஹதீஸ்களை நிராகரித்துள்ளார்.

(குறிப்பு:- சூனியம் தொடர்பாக இதற்கு முன்பே அல்ஜன்னத் இதழில் பல தொடர்களில் விளக்கமளிக்கப்பட்டுள்ளது குறிப்பிடதக்கது)

இச்சமயத்திலேயே "தொண்டியானி" தரப்பில், பால் குடித்தல் ஹதீஸுக்கு மட்டும் ஏகத்துவம் இதழில் மறுப்பு எழுதப்பட்டது. அதற்கு மீண்டும் தெளிவான விளக்கம். அல்ஜன்னத்தில் தொடராக கொடுக் கப்பட்டது.

ஆனால் மற்ற மூன்று ஹதீஸ்களுக்கும் அல்ஜன்னத் கொடுத்த விளக்கத்திற்கு எதிர் தரப்பில் எதுவும் எழுதவில்லை என்பதை இங்கு பதியவைக்கின்றோம்.

அல்ஜன்னத்தில் வெளியிட்ட அனைத்து வாதங்களுக்கும் எப்பொழுதோ பதில் எழுதிவிட்டதாக சகோ தொண்டியானி தரப்பினர் திசை திருப்பினர் இதற்கு முன்னர் இவர்களுக்கு சிலரால் அளிக்கப்பட்டிருந்த மறுப்புக்களை விட கூடுதலான ஆதாரங்களுடன் தான் இத்தொடர் எழுதப்பட்டுள்ளது. குர்ஆன் ஹதீஸை பின்பற்றும் முஸ்லிம் மக்களின் தரப்புக்கு ஆதாரமாக அமையக் கூடிய சில பழைய கருத்துக்களும் இதில் இடம் பெற்றுள்ளது.

இத்தொகுப்பிலே ஹதீஸ் நிராகரிப்பாளர்கள் என்கிற வாசகம் உபயோகிக்கப்பட்டுள்ளது. இதற்கு காரணம் அவர்கள் “ஹதீஸ்களை அருவருப்பாக பேசுவதும், திரிப்பு வேலை, மோசடி, பித்தலாட்டாம், நினைத்தால் எந்த ஹதீஸையும் பலவீனப் படுத்துவது, அதை வலு சேர்க்க பல ஹதீஸ்களை பலஹீனமாக்கி அதிகரித்துக் கொண்டே செல்வது” போன்ற செயல்களில் நீடிப்பது தான்! நபிக்கு சூனியம் செய்யப்பட்ட ஹதீஸை நம்பும் முஸ்லிம்கள் குறித்து அவர்கள் பயன்படுத்தும் “முஷ்ரிக்” என்ற கொடிய அபாண்டமான வார்த்தைக்கு முன் நமது வார்த்தை ஒன்றுமில்லை. முந்தைய காலத்தில் ஹதீஸ்களை நிராகரித்தவர்கள் இதே வழிமுறையை தான் கடைபிடித்தார்கள். எனவே இவர்களுக்கும் இப்பெயர் சூட்டப்பட்டுள்ளது.

முக்கியமான ஒரு கருத்தை இங்கு பதியவைக்கின்றோம். சூனியம் தொடர்பான ஹதீஸை நிராகரித்த பழைய வழிகேடர்கள் (அவர்களுக்கும் முஸ்லீம் அறிஞர்களால் தக்க பதில் கொடுக்கப் பட்டுள்ளது) கூட இந்த ஹதீஸை நம்புபவர்கள் “முஷ்ரிக்” என்று கூறியதில்லை

ஆனால், சகோ – “தொண்டியானி” தனது கொள்கையில் இருந்து மூதாதையர்களை விட ஒரு படி மேல சென்று மார்க்கத்தில் மிக தவறான வழிமுறையை கையாண்டு குர்ஆன் ஹதீஸில் விளையாடு கிறார் என்பது மிக தெளிவாகிறது.

இந்நூலை வாசகர்கள் மிகத் தெளிவாக படித்து, எளிதாக உணர்ந்துகொள்ள இத்தொடர் வெளிவந்த நிலையிலேயே வெளியிடப் படுகிறது. மிகச்சில திருத்தங்கள் மட்டும் செய்யப்பட்டுள்ளது.

இந்நூல் வெளிவர ஒத்துழைத்த ஆசிரியர் மற்றும் அனைத்து சகோதரர்களுக்கும் அல்லாஹ் நற்கூலி வழங்கட்டும். உண்மையை உணர அனைவருக்கும் அல்லாஹ் உதவி புரிவானாக!

ஆமீன்

அல்லாஹ்வுக்கே அனைத்துபுகழும்
**பதிப்பகத்தார் – Blue Moon Media**



# வழிகேடர்கள் நிராகரிக்கும் ஹதீஸ்கள்

## அத்தியாயம் – 1

இஸ்லாத்தின் அடிப்படைகள் குர்ஆனும் ஹதீஸும். இவ்விரு அடிப்படைகளிலும் குழப்பத்தை ஏற்படுத்துவதும் அவற்றிலுள்ள செய்திகளை அர்த்தமற்றவையாக்குவதும் முஸ்லிம்களுக்குள் தோன்றிய வழி கேடர்களின் செயல். குறிப்பாக ஹதீஸ்கள் விஷயத்தில் இந்த வழிகேடர்கள் செய்யும் விஷமம் அதிகம்.

தற்காலத்தில் நமது தமிழகத்தில் தமிழ்நாட்டு தவ்ஹீத் ஜமா அத்தினருக்கெல்லாம் தலைமை தாங்குவதாக சொல்லிக் கொள்ளும் சிலரும் ஹதீஸ்கள் விஷயத்தில் இத்தகைய விஷமத்தைச் செய்து கொண்டிருக்கிறார்கள்.

ஆதாரப்பூர்வமான நபிமொழிகளை குர்ஆனுக்கும் அறிவுக்கும் முரண்படுவதாக சித்தரித்து அவற்றை மறுப்பதும், கேலி கிண்டல் செய்வதும் இவர்களின் வழிகேட்டுக்கு தெளிவான ஆதாரமாகும்.

ஆனாலும் இவர்கள் இந்த வழிகேட்டுக்குச் செல்வதற்கு முன் தவ்ஹீத் கொள்கைப் பற்றி நல்ல முறையில் பிரச்சாரம் செய்திருக்கி றார்கள். குர்ஆன் ஹதீஸைப் பின்பற்றுவதை அதிகமாக வலியுறுத்திப் பேசியிருக்கிறார்கள். இதுவெல்லாம் இவர்களின் இந்த ஹதீஸ் மறுப்பு வழிகேட்டை மக்கள் சரியாக புரிந்துக் கொள்வதற்குத் தடையாக உள்ளது.

தவ்ஹீதை சிறப்பான முறையில் பேசி விளக்கினாலும், குர்ஆன் ஹதீஸை அழகாகப் பேசினாலும் இந்த வழிகேடு ஒரு பெரிய வழிகேடு என்பதை அறிய வேண்டும். இதைச் சிலர் அறிந்தாலும் வேறு சிலர் அறியாமல் இவர்களின் தீய வலையில் விழுந்து விடுகின்றனர்.

**இந்த ஹதீஸ் நிராகரிப்பு வழிகேடர்கள் தங்கள் கட்சிக்கு இஸ்லாத்தின் அடிப்படையான “தவ்ஹீத்” எனும் வார்த்தையைப்**

**பெயராக வைத்துக் கொண்டிருப்பது நன்மக்கள் பலர் இவர்களை சரியாகப் புரிய இயலாமல் போவதற்குக் காரணமாகும்.**

அல்லாஹுத்தஆலா தனது வேதத்துக்கு விளக்கமளிக்கின்ற பணியை தனது தூதர்(ஸல்) அவர்கள் மீது சுமத்தியுள்ளான். அல்லாஹ் கூறுகிறான்:

**(நபியே!) மக்களுக்கு அவர்களுக்கு இறக்கப்பட்டதை நீர் தெளிவு படுத்துவதற்காகவும் அவர்கள் சிந்திப்பதற்காகவும் உமக்கு இவ்வேதத்தை நாம் இறக்கி வைத்தோம். (அல்குர்ஆன் 16:44)**

இதன்படி நபிமொழி குர்ஆனுக்கு விளக்கமாகத்தான் இருக்கிறது. அதனால் ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களை நிராகரிக்கக் கூடாது. இப்படி நாம் சொல்லும் போது நாங்கள் எல்லா ஹதீஸ்களையும் நிராகரிக்கவில்லை. சில ஹதீஸ்களைத் தான் நிராகரிக்கிறோம் என்கிறார்கள்.

உண்மையில் ஹதீஸ்களை ஒட்டு மொத்தமாக நிராகரிக்கும் வழிகேடர்களும் ஆரம்பத்தில் சில ஹதீஸ்களை மறுப்பவர்களாகத் தான் இருந்துள்ளார்கள். அப்படி ஆரம்பித்தது தான் ஒட்டுமொத்தமாக நிராகரிக்கும் நிலைக்கு அவர்களை கொண்டு சென்றுள்ளது.

**சில ஹதீஸ்களை மட்டும் நிராகரிப்பதாகச் சொல்லிக் கொள்ளும் இவர்களும் கூட நிராகரிக்கும் ஹதீஸ்களின் எண்ணிக்கையை அதிகரித்துக் கொண்டே செல்வதைப் பார்க்கிறோம். இவர்கள் இதற்கு முன் நிராகரித்துக் கொண்டிருந்த ஹதீஸ்களில் அஜ்வா பேரீத்தப் பழம் பற்றிய (புகாரி 5445, 5768) ஹதீஸும் கண் திருஷ்டி பற்றிய (புகாரி 5740) ஹதீஸும் இருக்க வில்லை. இப்போது இந்த ஹதீஸ்களையும் மறுத்துக் கொண்டிருக்கிறார்கள்.**

### நல்ல முஸ்லிமின் நிலைப்பாடு:

இந்த ஹதீஸ் நிராகரிப்பாளர்கள் தங்களின் நிராகரிப்புக் கொள்கைக்கு காரணமாகச் சொல்வது குர்ஆனுக்கு முரண்படுகிறது என்பதைத் தான். உண்மையில் இவர்களால் நிராகரிக்கப்படும் ஹதீஸ்கள் குர்ஆனுக்கு முரண்படவில்லை.



அப்படியே முரண்படுவதாகத் தோன்றினாலும் ஒரு நல்ல முஸ்லிம் எனக்கு இந்த ஹதீஸின் கருத்து குர்ஆனுடன் முரண்படுவதாகத் தோன்றுகிறது. என்னால் புரிந்து கொள்ள இயலவில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

ஹதீஸ்கலை அறிஞர்கள் அவ்வாறு குர்ஆனுக்கு முரண்படுவதாக இடைக்காலத்தில் எழுந்த வாதங்களுக்கு விளக்க மளித்திருக்கிறார்கள். முஸ்லிம்கள் அந்த ஹதீஸ்களை குர்ஆனுக்கு முரண்பாடில்லாமல் புரிந்து வருகிறார்கள்.

ஹதீஸ் அறிஞர்கள் குர்ஆனுக்கு முரண்படாமல் புரிந்திருந்தாலும் முரண்படுவதாக எழுந்த தவறான வாதங்களுக்கு அவர்கள் விளக்கமளித்திருந்தாலும் முஸ்லிம்களெல்லாம் குர்ஆனுக்கு முரண்படாமல் புரிந்திருந்தாலும் எனக்கு அவ்வாறு புரியாததை நான் ஹதீஸ் என்று ஏற்க மாட்டேன். என கூறுவது ஷைத்தானியத் தனத்தின் வெளிப்பாடு! உண்மையில் ஹதீஸ்களை குறித்து இவர்களிடம் முக்கியத்துவமும் இல்லை பேணுதலும் இல்லை.

ஹதீஸை மறுக்க வேண்டுமென்று முடிவு செய்துவிட்டால் அந்த ஹதீஸிலேயே திரித்து, இடைச் செருகல் செய்கிற வேலையை இவர்கள் செய்வார்கள்.

### ஹதீஸில் பித்தலாட்டம்

இந்த ஹதீஸ் நிராகரிப்பாளர் எழுதி வைத்திருப்பதைப் படித்தால் தவ்ஹீத் பிரச்சாரகர் என்று சொல்வதற்கு மட்டுமல்ல ஒரு சரியான முஸ்லிம் என்று சொல்லிக் கொள்வதற்குக் கூட தகுதியற்றவர் என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

இதோ தனது தவறான கொள்கையை நிலை நிறுத்துவதற்காக ஹதீஸிலேயே எப்படி பித்தலாட்டம் செய்கிறார் என்பதைப் பாருங்கள். பெரியவர் பால்குடிப்பது தொடர்பான ஹதீஸை மறுக்க வேண்டும் என்பதற்காக அந்த ஹதீஸிலேயே தனது கீழ்த்தரமான சிந்தனையை புகுத்தி எழுதுவது:

**“ஸாலிம் எனும் இளைஞர் ஆபூஹுதைபா(ரலி) வீட்டுக்குள் வந்து போய்க் கொண்டிருந்தார். தமது மனைவியுடன் ஸாலிம்**

**வந்து பேசிக் கொண்டிருப்பது அபூஹுதைபாவிற்குச் சங்கடத்தை ஏற்படுத்தியது.''**

இது இந்த ஹதீஸ் நிராகரிப்பாளர் தனது திருக்குர்ஆன் மொழி பெயர்ப்பின் விளக்கப்பகுதியில் நபிகள் நாயகத்துக்கு சூனியம் எனும் தலைப்பில் 1309வது பக்கத்தில் எழுதியிருப்பதாகும். 7வது பதிப்பு.

இதே ஹதீஸை அடுத்த பதிப்பில் எழுதியிருப்பதைப் பாருங்கள்:

**"அபூஹுதைபா(ரலி) அவர்களின் மனைவியால் வளர்க்கப் பட்ட ஸாலிம் எனும் இளைஞர் அபூஹுதைபாவின் வீட்டுக்குள் வந்து போய்க் கொண்டிருந்தார்.** தமது மனைவியுடன் ஸாலிம் வந்து பேசிக் கொண்டிருப்பது அபூஹுதைபாவிற்குச் சங்கடத்தை ஏற்படுத்தியது.'' **பக்கம் 1446, 8வது பதிப்பு**

இரண்டு பதிப்பிலும் உள்ள வித்தியாசத்தைக் கவனியுங்கள். தான் மறுக்கிற ஹதீஸை கொச்சைப் படுத்தி அறுவறுப்பாகக் காட்ட வேண்டும் என்பதற்காக ஒரு இளைஞர் அபூஹுதைபா(ரலி) அவர் களின் மனைவியிடம் பழக்கம் வைத்து வந்து பேசிக்கொண்டிருந்ததாக முந்தைய பதிப்புக்களில் சித்தரித்துள்ளார். இந்த பித்தலாட்டம் சிலரால் வெளிப்படுத்தப்பட்ட பின் (யாரால் எப்படி வெளிப்பட்டது என்ற தகவல் இந்நூலின் ஐந்தாவது அத்தியாயத்தில் இடம் பெறுகிறது.) எட்டாவது பதிப்பில், அபூஹுதைபா(ரலி) அவர்களின் மனைவியால் வளர்க்கப்பட்ட இளைஞர் தான் அவர் என்பதை குறிப்பிட்டுள்ளார் உண்மையில் அவர் அபூஹுதைபா(ரலி) அவர்களின் வளர்ப்பு மகன்தான். அபூ ஹுதைபாவின் மனைவியும் ஸாலிம்(ரலி) அவர்களை மகனாகக் கருதினார்கள். இவ்வாறுதான் ஹதீஸ்களின் இடம் பெற்றுள்ளது. (நூல்: அபூதாவூத் (2063), அஹ்மத் (25650), முஅத்தா (537)).

இங்கே நாம் கவனிக்க வேண்டியது. தான் மறுக்கிற ஹதீஸை கொச்சைப்படுத்திக் காட்ட வேண்டும் என்பதற்காக ஹதீஸில் உள்ளதை உள்ளபடிச் சொல்லாமல் படிக்கும் போதே அந்த ஹதீஸை மறுக்கத் தோன்றும் விதத்தில் வார்த்தைகளை அமைத்திருப்பது.

ஹதீஸிலேயே இப்படித் தில்லுமுல்லு செய்பவர் மார்க்க விஷயத்தைப் பேசுவதில் நம்பகமானவர் அல்ல. ஹதீஸை மறுக்கத்



துணிந்து விட்டால் ஹதீஸைத் திரிக்க ஆரம்பித்து விடுவர் என்பது தெளிவாகத் தெரிகிறது.

இது ஸின்தீக்குகளின் (மார்க்கத்தின் பெயரால் குழப்பம் செய்பவர்களின்) செயல்பாடு! மறுமை வெற்றியை விரும்பக் கூடியவர்கள் இத்தகையவர்களின் இதுபோன்ற செயல்பாடுகள் பற்றி எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

அல்லாஹ்வின் உதவியால் இவரது குர்ஆன் தர்ஜுமாவில் விளக்கப் பகுதியில் குர்ஆனுக்கு முரண்படுவதாக சித்தரித்து நிராக ரித்திருக்கும் ஹதீஸ்களின் விளக்கங்களை இந்தத் தொடரில்

## முதல் ஹதீஸ்: ஸாலிம் (ரலி) சம்பவம்

இந்தத் தொடரில் முதலாவதாக பெரியவர் பால்குடித்தது தொடர்பான ஹதீஸை எடுத்துக் கொள்வோம். அந்த நபிமொழி வருமாறு:

ஆயிஷா(ரலி) அவர்கள் கூறியதாவது:

**அபூஹுதைஃபாவின் அடிமை(யும் வளர்ப்பு மகனுமான) ஸாலிம் (ரலி) அவர்கள் அபூஹுதைஃபா மற்றும் அவருடைய மனைவியுடன் அவர்களது வீட்டில் இருந்து வந்தார். அப்போது (அபூஹுதைஃபாவின் மனைவி சஹ்லா) பின்த் சுஹைல் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, ஸாலிம் ஆண்கள் அடையும் பருவ வயதை அடைந்துவிட்டார். மற்ற ஆண்கள் அறிவதை அவரும் அறிகிறார். இந்நிலையில் அவர் எங்கள் வீட்டிற்குள் வருகிறார். இதனால் (அவர் என்னைத் திரையின்றி பார்க்க நேரிடும் என்பதால் என் கணவர்) அபூ ஹுதைஃபாவின் மனத்தில் அதிருப்தி நிலவுகிறது என்று நான் எண்ணுகிறேன் என்று கூறினார்கள்.**

**அப்போது நபி(ஸல்) அவர்கள் சஹ்லாவிடம் "நீ அவருக்குப் பால் கொடுத்துவிடு, இதனால் அவருக்குச் செவிலித்தாய் ஆகிவிடுவாய். (உன்னுடைய கணவர்) அபூ ஹுதைஃபாவின் மனத்தில் நிலவும் அதிருப்தியும் மறைந்து விடும்'' என்று கூறினார்கள்.**

**அவர் (திரும்பிச் சென்று) மீண்டும் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, நான் அவருக்குப் பால் கொடுத்து விட்டேன். இதனால் என் கணவர் அபூஹுதைஃபாவின் மனத்தில் நிலவிய அதிருப்தியும் மறைந்துவிட்டது" என்று கூறினார். நூல்: முஸ்லிம் 2878, 2879, 2880**

இங்கு முக்கியமாக ஒன்றைத் தெரிந்துக் கொள்ள வேண்டும். இந்த ஹதீஸ் ஒரு அறிவிப்பாளர் தொடரில் பதிவாகி இருந்திருந்தால் கூட மறுக்க முடியாது. ஆனால் இது பல அறிவிப்புக்களில் பதிவு செய்யப்பட்டுள்ள ஹதீஸாகும்.

மேற்கண்ட முஸ்லிமில் இடம் பெறும் 2878, 2879, 2880 ஆகிய மூன்று ஹதீஸ்களும் ஆயிஷா(ரலி) அவர்களிடமிருந்து அல்காஸிம் பின் முஹம்மது அவர்கள் கேட்டு அவர்களின் மாணவர்களுக்கு அறிவித்து அவர்கள் வாயிலாக பல வழிகளில் அறிவிக்கப்பட்டுள்ளது.

அடுத்து முஸ்லிமின் 2881, 2882 ஆகிய ஹதீஸ்கள், சஹ்லா(ரலி) அவர்களின் சம்பவம் தொடர்பாக ஆயிஷா(ரலி) அவர்களுக்கும் உம்மு சலமா(ரலி) அவர்களுக்கும் நடந்த உரையாடலைச் செவியுற்ற நபி(ஸல்) அவர்களின் வளர்ப்பு மகள் ஸைனப் பின்த் அபீசலமா(ரலி) அவர்கள் ஹுமைத் பின் நாஃபிஉ அவர்களுக்கு அறிவித்தாகும்.

அடுத்து முஸ்லிமின் 2883வது ஹதீஸ் சஹ்லா(ரலி) அவர்கள் சம்பவம் தொடர்பாக ஆயிஷா(ரலி) அவர்கள் தவிர்த்து நபியின் மற்ற மனைவியரின் நிலைப்பாடு என்ன என்பதை உம்மு சலமா(ரலி) அவர்கள் கூறியதாகும். இதனை ஸைனப் பின்த் அபீசமலா(ரலி) அவர்கள் அபூஉபைதாபின் அப்துல்லாஹ் அவர்களுக்கு அறிவித்துள்ளார்கள்.

அடுத்து அபூதாவூத் 2063, நஸாயி 3224 ஆகிய ஹதீஸ்கள் ஆயிஷா(ரலி) உம்மு சலமா(ரலி) ஆகிய இருவரிடமிருந்தும் உர்வா பின் அஸ்ஸுபைர் அவர்கள் இதே சம்பத்தை அறிவிப்பதாக உள்ளன.

இவ்வாறு இந்த ஹதீஸ் பல அறிவிப்புக்களில் வலுவான அறிவிப்பாளர் தொடர்கள் மூலம் அறிவிக்கப்பட்டுள்ளது. ஒரே அறிவிப்பாளர் வரிசை வழியாக வரும் ஆதாரப் பூர்வமான



ஹதீஸையும் கூட மறுக்க முடியாது எனும் போது இப்படி பல அறிவிப்பாளர் தொடர் மூலம் அறிவிக்கப்படும் ஹதீஸில் சந்தேகம் கொள்ள எந்த முகாந்திரமும் இல்லை.

முதன்மையான ஹதீஸ் நூல்கள் பலவற்றில் இந்த ஹதீஸ் பதிவு செய்யப் பட்டிருப்பது இது பிரபலமான சம்பவம் என்பதற்கு ஆதாரமாக உள்ளது.

### நிராரிப்பின் காரணம்:

இந்த ஹதீஸ் நிராகரிப்பாளர் இந்த ஹதீஸை மறுப்பதற்கு எழுதியுள்ள காரணத்தைப் படியுங்கள்:

"அன்னிய இளைஞர் ஒருவருக்குப் பால் கொடுக்குமாறு நபிகள் நாயகம் (ஸல்) நிச்சயம் கூறியிருக்க மாட்டார்கள். பால் ஊட்டுதல் என்பது இரண்டு வயது வரை உள்ள குழந்தைகளுக்குத்தான் பொருந்தும் என்பதால் இந்தச் செய்தியை ஏற்காது நாம் விட்டு வருகிறோம்"

**(இது அவரது குர்ஆன் தர்ஜுமாவின் விளக்கவுரை பகுதியில் 1446ம் பக்கத்தில் உள்ளது, பதிப்பு: 8)**

### மறுப்பும் விளக்கமும்:

மேற்கண்ட அவரது எழுத்துக்களில் இந்த ஹதீஸை மறுப்பதற்க இரண்டு வாதங்களை வைத்துள்ளார். **ஒன்று** அன்னிய இளைஞருக்கு ஒரு பெண் பாலூட்டுவது அருவருப்பானது, குர்ஆன் ஹதீஸ் படி கூடாதது.

**இரண்டு,** பால்குடித்தல் இரண்டு வயதுக்குள் நடந்திருந்தால் தான் தாய் பிள்ளை உறவு எற்படும் இதுவும் குர்ஆன் ஹதீஸ் கூறும் சட்டம் தான்.

இந்த இரு வாதங்களுக்கும் தவ்ஹீத்வாதிகள் அளிக்கும் மறுப்பையும் விளக்கத்தையும் பார்ப்போம்.

முதல் வாதத்தில் சொல்லப்பட்டுள்ளதுபோல் நேரடியாக பால் கொடுக்கப்படவில்லை, பாத்திரத்தில் எடுத்துத் தான் கொடுக்கப் பட்டுள்ளது.

இப்படித்தான் நடந்தது என்பதற்கு நம்மிடம் வலுவான ஆதாரம் உள்ளது, அதாவது மார்க்கத்தில் ஒரு விஷயம் சொல்லப்படும் போது அதை ஏற்கனவே மார்க்கம் தடை செய்துள்ள விதத்தில் செய்வதாக கருத்து வருகிறது. ஆனாலும் மார்க்கத்தில் தடையில்லாத விதத்தில் செய்வதாக கருத்துக் கொள்வதற்கும் வாய்ப்பு உள்ளது. இவ்விதத்தில் அமைந்திருந்தால் எப்படி எடுத்துக்கொள்ள வேண்டும்? அதை மார்க்கத்தில் அனுமதிக்கப் பட்ட விதத்தில் செய்வதாகத்தான் எடுத்துக் கொள்ள வேண்டும்!

இப்படித்தான் எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதற்கு குர்ஆனி லிருந்து ஆதாரம் காட்ட முடியும். லூத்(அலை) அவர்களிடம் வான வர்கள் மனித வடிவத்தில் வந்த போது அசிங்கமான நோக்கத்துடன் அவர்களின் சமூகத்தவர் அவர்களை நோக்கி வந்தார்கள். அப்போது லூத்(அலை) அவர்கள் அக்கூட்டத்தைப் பார்த்துக் கூறியதை அல்லாஹுதஆலா இவ்வாறு சொல்லிக் காட்டுகிறான்:

“என் சமுதாயமே! இதோ என் புதல்விகள் உள்ளனர். அவர்கள் உங்களுக்குத் தூய்மையானவர்கள்”

(அல்குர்ஆன் 11:78, மற்றும் இதன் கருத்து 15:71)

இங்கு தவறான செயல் செய்யும் நோக்கத்துடன் வந்தவர்களிடம் வெறுமனே என் புதல்விகள் உங்களுக்குத் தூய்மையானவர்கள் என்று லூத்(அலை) கூறியுள்ளார்கள். இங்கு திருணம் செய்து என்று கூறப்படாவிட்டாலும் திருணம் செய்து முறைப்படி அணுகுவதைத் தான் சொன்னார்கள் என்று தான் எல்லோரும் புரிந்து கொள்கிறோம். ஏனென்றால் திருணம் செய்யாமல் அணுகுவது தடை செய்யப்பட்ட தாகும். அதனால்தான் சில திருக்குர்ஆன் மொழி பெயர்ப்புக்களில், “திருமணத்திற்கு” எனும் வார்த்தையை அடைப்புக் குறியில் எழுதியிருக்கிறார்கள்.

ஆகவே இந்த ஹதீஸில் பால் கொடுக்குமாறு சொல்லப்படுவது எடுத்துக் கொடுப்பதைத்தான் சொல்லப்படுகிறது. அப்படித்தான் நடந்துள்ளது.



இந்த ஹதீஸை இப்படித்தான் புரிய வேண்டும் என்று நாம் சொல்வது இந்த வழிகேடருக்கு நாம் மறுப்பளிக்க வேண்டுமென்பதற் காக சொல்வதல்ல. இதைப் பதிவு செய்துள்ள இமாம் அபூதாவூத் அவர்களே கூறியிருப்பது தான்.

ஸாலிம்(ரலி) அவர்கள் தொடர்பான இந்த ஹதீஸைப் பதிவு செய்து விட்டு இமாம் அவர்கள் எழுதுவது.

“மார்க்கத்தைக் கற்றவர்களின் கருத்து இங்கு பால்குடித்தல் என்பதன் மூலம் நாடப்படுவது என்னவெனில், சஹ்லா(ரலி) அவர்கள் ஒரு பாத்திரத்தில் தனது பாலை எடுத்து ஸாலிமுக்கு, அவர் குடிப் பதற்காதக அனுப்ப வேண்டும். இவ்வாறு ஐந்து தடவை தொடர்ந்து செய்வதால் அவர்கள் ஸாலிம்(ரலி) அவர்களுக்கு மஹ்ரமாக ஆவார்கள்”

(பார்க்க: அபூதாவூத் ஹதீஸ் 2063) (இந்த விளக்கம் இமாம் அபூதாவூத் அவர்களே பதிந்தது என்பது சந்தேகத்துக்குரியது கூடுதல் விவரம் இந்நூலின் 3வது மற்றும் 6வது அத்தியாயத்தில் உள்ளது.)

அடுத்து இந்த ஹதீஸை நிராகரிப்பதற்கு இவர் வைக்கும் வாதம், “ஒரு குழந்தைக்கு இரண்டு வயதுக்குள் பால் கொடுத்தால் தான் தாய்பிள்ளை என்ற உறவு ஏற்படும்” என்பதாகும்.

இந்த வாதத்திற்கும் தவ்ஹீத்வாதிகளிடம் விளக்கம் இருக்கிறது. அதாவது இரண்டு வயதுக்குள் பால்குடித்தால் தான் தாய் பிள்ளை உறவு ஏற்படும் என்பது உண்மை என்றாலும் இது ஸாலிம் (ரலி) அவர்களுக்காக மட்டும் வழங்கப்பட்ட சிறப்பு உத்தரவாகும். ஆகையால் இந்த ஹதீஸை மறுக்கத் தேவையில்லை.

இப்படி நாம் சொல்லும் போது ஹதீஸ் நிராகரிப்புக் கொள்கைக் காரார், நபி (ஸல்) அவர்கள் ஒன்றைச் சொன்னால் அதைப் பொதுவாகத் தான் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கூறி ஆட்சேபிக்கலாம்.

அப்படி ஆட்சேபித்தால் அதற்கு நமது விளக்கம், சம்பந்தப்பட்ட இந்த ஹதீஸிலேயே நமது கூற்றுக்கான ஆதாரம் இருக்கிறது என்பது தான், ஹதீஸை மறுத்து விடலாம் என்ற அலட்சியத்துடன் படிக்காமல்

உண்மையை அறிந்து கொள்ள வேண்டும் என்ற இலட்சியத்துடன் படியுங்கள்.

ஸாலிம்(ரலி) அவர்களுக்கு பால் கொடுக்கும்படி உத்தரவிடும், நாம் முன்னர் குறிப்பிட்ட அந்த ஹதீஸின் பிற்பகுதியை மீண்டும் படியுங்கள்:

அப்போது நபி(ஸல்) அவர்கள் சஹ்லாவிடம் நீ அவருக்குப் பால் கொடுத்து விடு. இதனால் அவருக்குச் செவிலித்தாய் ஆகிவிடுவாய். **(உன்னுடைய கணவர்) அபூ ஹுதைஃபாவின் மனதில் நிலவும் அதிருப்தியும் மறைந்து விடும் என்று கூறினார்கள்.**

**அவர் (திரும்பிச் சென்று) மீண்டும் நபி(ஸல்) அவர்களிடம்) வந்து, நான் அவருக்குப் பால் கொடுத்து விட்டேன். இதனால் என் கணவர் அபூ ஹுதைஃபாவின் மனதில் நிலவிய அதிருப்தியும் மறைந்து விட்டது என்று கூறினார். நூல் : முஸ்லிம் 2879**

இங்கு சொல்லப்படும் வாசகங்கள் தெள்ளத்தெளிவாக இது ஸாலிம் (ரலி) அவர்களுக்கென தனிப்பட்ட முறையில் சொல்லப்பட்டது தான் என்பதற்கு ஆதாரமாக உள்ளன.

இந்த ஹதீஸில் அபூஹுதைஃபாவின் மனதிலுள்ள அதிருப்தி மாறும் என்று நபி சொல்கிறார்கள். அதுபோலவே ஸாலிமுக்கு பால் கொடுத்த பின் அபூஹுதைஃபா வின் அந்த அதிருப்தி மறைந்து விட்டது என்று அவர்களின் மனைவி திரும்ப வந்து சொல்கிறார்கள்.

இப்படி மனதில் அதிருப்தி நிலவும் கணவர் எவருக்கும் இம்முறையில் பால் கொடுப்பதால் மட்டும் அந்த அதிருப்தி மாறி விடாது. ஆனால் அபூஹுதைஃபா(ரலி) அவர்களுக்கு மாறியுள்ளது. எனவே இது இவர்களுக்கென குறிப்பாக சொல்லப்பட்டது தான் என்பது தெளிவாகிறது.

இது ஸாலிமுக்கு மட்டுமே குறிப்பானது தான் என்பதை ஒரு ஹதீஸும் நமக்குக் கூறுகிறது அது வருமாறு:

**ஸைனப் பின்த் அபீ சலமா(ரலி) அவர்கள் கூறியதாவது:**



**என் தாயாரும் நபி(ஸல்) அவர்களின் துணைவியாருமான உம்முசலமா(ரலி) அவர்கள் கூறுவார்கள்: (ஆயிஷா(ரலி) அவர்களைத் தவிர) நபி(ஸல்) அவர்களுடைய மற்றத் துணைவியர் எவரும் பால் குடிப்பருவத்தைக் கடந்த ஒருவருக்குப் பால் கொடுத்து ('செவிலித்தாய் மகன்' என்ற) உறவை ஏற்படுத்தி அவரைத் தங்களது வீட்டிற்குள் நுழைய அனுமதிக்க மறுத்து விட்டனர்.**

**மேலும் நபி(ஸல்) அவர்களுடைய மற்றத் துணைவியர் ஆயிஷா(ரலி) அவர்களிடம் "அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் ஸாலிம்(ரலி) அவர்களுக்கு மட்டுமே இந்த முறையை அனுமதித்தார்கள் என்றே நாங்கள் கருதுகிறோம். (பால்குடிப் பருவத்தைக் கடந்த பின்) பால்குடி உறவை ஏற்படுத்தும் இந்த முறைப்படி யாரும் எங்களது வீட்டிற்குள் வந்ததுமில்லை" எங்களை(த்திரையின்றிப் பார்த்தது மில்லை என்று கூறினர். நூல்: முஸ்லிம் 2883**

ஆக நபி(ஸல்) அவர்களின் மனைவியர் எல்லாம் ஸாலிமுக்கு மட்டுமே உரிய அனுமதி என்று தான் கூறியுள்ளார்கள். இதில் ஆயிஷா(ரலி) அவர்களுக்கு மட்டும் மாற்றுக் கருத்து இருந்துள்ளது.

சஹ்லா(ரலி) அவர்களுக்கு நபி(ஸல்) உத்தரவிட்டதை வைத்து மற்றவர்களும் அப்படிச் செய்யலாம் என்று ஆயிஷா(ரலி) அவர்கள் கூறும் தகவல் முஸ்லிமின் 2881, 2882 ஆகிய அறிவிப்பில் இடம் பெறுகிறது. அத்துடன் தன் வீட்டுக்கு வரும் ஒரு பருவ வயதை நெருங்கிய சிறுவன் விஷயத்தில் இவ்வாறு அவர்கள் செயல்படுத்திய தாகவும் அந்த அறிவிப்புக்களில் இடம் பெற்றுள்ளது.

**ஆனால் நபியின் ஏனைய மனைவியரின் கூற்றுத்தான் வலுவாக உள்ளது. ஏனென்றால் ஆயிஷா (ரலி) அவர்கள் தனது நிலைப்பாட்டுக்கு மேற்கோளாகக் காட்டுவது சஹ்லா (ரலி) அவர்களின் ஹதீஸைத்தான்.**

**அந்த ஹதீஸில் சஹ்லா(ரலி) அவர்கள், தனது கணவர் அபூஹுதைஃபாவின் மனதில் ஏற்பட்ட அதிருப்தியை நபியிடம் முறையிடுகிறார்கள். அது தான் பிரச்சினையே, அதற்குத்தான் நபி(ஸல்) அவர்கள் தீர்வு சொல்கிறார்கள்.**

**பெண்கள் தமது வீட்டுக்கு வேலைக்கு வரும் ஆண்களிடம் இவ்வாறு பால்குடி உறவை ஏற்படுத்திக் கொள்வது பொது வானது என்றால் நபி(ஸல்) அவர்கள் அந்த சமூகத்துக்குப் பொதுவாகச் சொல்லியிருப்பார்கள். அந்த சஹாபாக்கள் சமுதாயத்தில் பலரும் அப்படிச் செய்திருப்பார்கள். நபியவர்களின் ஏனைய மனைவி மார்கள் ஸாலிமுக்கு மட்டுமே கொடுக்கப்பட்ட சிறப்பு அனுமதி என்று சொல்வதற்கு எந்த முகாந்திரமுமே இருந்திருக்காது.**

எனவே நபியின் மற்ற மனைவியரின் கூற்றே சரியானது என்பது புலனாகிறது. ஸாலிம்(ரலி) அவர்களுக்கு மட்டும் ஏன் இப்படி நடக்க வேண்டும் என்று நாம் கேட்டு உறுதியான ஒரு சம்பவத்தை மறுக்க வேண்டியதில்லை. ஏனென்றால் இது நபியின் ஓர் அற்புதம் என்று சொல்லத்தக்க விதத்தில் அமைந்துள்ளது. அபூ ஹுதைஃபா(ரலி) அவர்களின் மனதில் அதிருப்தி ஏற்பட்டுள்ளதை சஹ்லா (ரலி) அவர்கள் நபியிடம் முறையிட்டதும் ஸாலிமுக்கு பால் கொடுத்து விடு அபூஹுதைஃபாவின் மனதில் ஏற்பட்டுள்ள அதிருப்தி மறைந்து விடும் என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள். நபியவர்கள் சொன்னது போலவே அபூஹுதைஃபாவின் அதிருப்தி மறைந்தது. சஹ்லா (ரலி) அவர்கள் மீண்டும் நபியிடம் திரும்பி வந்து அபூஹு தைஃபா(ரலி) அவர்களின் மனதில் ஏற்பட்ட அதிருப்தி மறைந்து விட்டது என்று சொன்னார்கள்.

பொதுவாக இப்படி நடக்காது, ஆகவே இதை நபியவர்கவளின் அற்புதவங்களில் ஒன்று என்று சொல்வதும் சரிதான்!

### விநோதக் கேள்வி:

இந்த ஹதீஸில் சொல்லப்பட்டுள்ள சம்பவம் நடந்தது உண்மை என்று கூறி ஹதீஸை நம்பும் மக்களை நோக்கி இந்த ஹதீஸ் நிராகரிப்பாளர், ''இதன் அடிப்படையில் நடக்கலாம் என்று ஃபத்வா வழங்குவார்களா? நிச்சயம் வழங்க மாட்டார்கள்'' என்று கூறுகிறார்.

**இது இவர் ஹதீஸ்களை ஒழுங்காக படிப்பதில்லை என்பதற்கு பெரிய ஆதாரம். ஏனென்றால் இவரே எடுத் தெழுதியுள்ள முஸ்லிம் நூலில் ஸாலிம்(ரலி) பால்குடி தொடர்பான பாடத்தின் இறுதி ஹதீஸில் நபி (ஸல்) அவர்களின் மனைவியர் எல்லோரும்**



**(ஆயிஷா (ரலி) அவர்களைத் தவிர) ஸாலிம் (ரலி) அவர்களுக்கு மட்டுமே நபி (ஸல்) அவர்கள் கொடுத்த அனுமதி என்று கூறியது இடம் பெறுகிறது. நூல்: முஸ்லிம் 2883**

அரிதான மிகச் சிலரைத் தவிர மார்க்கம் கற்ற எல்லோரும் அக்காலத்திலும் இக்காலத்திலும் இதனைத் தான் சொல்கிறார்கள் என்பது பிரபலம், இதைக் கூட தெரிந்து கொள்ளாமல் இந்தக் கேள்வியை கேட்கிறாரா? அல்லது பொதுமக்களை மிரட்சி அடையச் செய்வதற்காக கேட்கிறாரா? அல்லாஹ்வே நன்கறிந்தவர்.

### மறுக்கவே இயலாத ஹதீஸ்:

இந்த ஹதீஸை மறுக்கவே முடியாது. ஏனென்றால் இந்த ஹதீஸின் அறிவிப்பாளர்களில் ஒருவரான பிரபல தாபிஈ இப்னு அபீமுலைகா இந்த ஹதீஸை மூத்த தாபிஈ காசிம் பின் முஹம்மதிடம் செவியுற்றபின் ஒரு வருட காலம் யாருக்கும் அறிவிக்காமல் அச்சத்துடன் இருந்துள்ளார். பிறகு காசிம் பின் முஹம்மது விடம் இதைச் சொன்ன போது, என்னிடம் ஆயிஷா(ரலி) அவர்கள் அறிவித்து நான் உங்க ளுக்கு அறிவித்ததாக தாராளமாக அறிவியுங்கள் என்று சொன்ன செய்தி முஸ்லிமில் 2880 வது ஹதீஸில் இடம் பெற்றுள்ளது.

ஆக இந்த ஹதீஸை அறிவிக்கும் தாபிஈயிடமே ஐயம் ஏற்பட்டு அவரிடம் இது உண்மை தான் என்று அவருக்கு அறிவித்த மூத்த தாபிஈயினால் விளக்கம் கொடக்கப்பட்டுள்ளது. அதனைத் தொடர்ந்து ஐயம் தெளிந்து உறுதியுடன் இந்த ஹதீஸை அறிவித்துள்ளார்.

ஆகவே இந்த ஹதீஸ் மிக வலுவானது. இதன் செய்தி குர்ஆனுக்கு முரண்டாடில்லாமல் முஸ்லிம்களால் புரியப்பட்டே வருகிறது. அனைவரும் உண்மையை அறிந்து கொள்ள அல்லாஹ் நல்லுதவி செய்வானாக!

# அத்தியாயம் -2

கடந்த இதழில் ஹதீஸ் நிராகரிப்பாளர்கள் மறுக்கும் பெரியவர் பால் குடித்தது தொடர்பான ஹதீஸுக்கு விளக்கமளித்திருந்தோம். இந்த வழிகேடர்களின் தவறான வாதங்களால் தடுமாற்றம் அடைந்திருந்த பல சகோதரர்கள் தெளிவு பெற்றதாக தெரிவிக்கின்றனர். அல்ஹம்து லில்லாஹ்.

இப்போது இந்த ஹதீஸ் நிராகரிப்பாளர்கள் நிராகரிக்கும் இன்னொரு ஹதீஸைப் பார்ப்போம்.

**“குறிப்பிட்ட பத்து தடவைகள் பால் அருந்தினால் தான் பால்குடி உறவு உண்டாகும்” என்ற வசனம் (முதலில்) குர்ஆனில் அருளப்பட்டிருந்தது. பின்னர் பத்து தடவைகள் என்பது குறிப் பிட்ட ஐந்து தடவைகள் என மாற்றப்பட்டது. இவ்வசனம் மக்கள் சிலரால் ஓதப்பட்டு வந்த காலத்தில்தான் அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் இறந்தார்கள்.**

**அறிவிப்பவர்: ஆயிஷா(ரலி) நூல்: முஸ்லிம் 2876, 2877**

இந்த ஹதீஸை நிராகரிப்பதற்காக பெயர்தாங்கி தவ்ஹீத்வாதி தனது திருக்குர்ஆன் மொழி பெயர்ப்பில் எழுதுவதைப் படியுங்கள்:

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் மரணிக்கும் வரை குர்ஆனில் அப்படி ஒரு வசனம் இருந்திருந்தால் அந்த வசனம் இன்றும் குர்ஆனில் நிச்சயம் இருந்தாக வேண்டும்.

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் காலத்திற்குப் பின் குர்ஆனில் உள்ள எதையும் நீக்கவோ, இல்லாததைச் சேர்க்கவோ முடியாது. நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் காலத்திலேயே குர்ஆன் முழுவதும் எழுத்து வடிவில் பதிவு செய்யப்பட்டு விட்டதாலும் ஏராளமான நபித்தோழர்கள் முழுக் குர்ஆனையும் மனனம் செய்திருந்ததாலும் குர்ஆனில் இருந்த ஒரு வார்த்தைக் கூட விடுபவடுதற்கு வழியே இல்லை.

ஆனால் ஆயிஷா(ரலி) அவர்கள் கூறுவது போல் ஒரு வசனம் குர்ஆனில் காணப்படவில்லை.



இந்த நிலையில் “முஸ்லிம் நூலில் இடம் பெற்ற ஹதீஸாயிற்றே? நம்பகமான அறிவிப்பாளர்கள் வழியாகப் பதிவு செய்யப்பட்டிருக் கிறதே” என்று காரணம் கூறி இதை ஏற்றுக் கொண்டால் என்ன விபரீதம் ஏற்படும் என்பதை சிந்தித்துக் பார்க்க வேண்டும்.

“குர்ஆன் பாதுகாக்கப்படவில்லை. நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் காலத்திற்குப் பின் குர்ஆனில் இருந்த பல வசனங்கள் நீக்கப்பட்டன” என்ற கருத்து இதனால் ஏற்படும் குர்ஆன் இறைவனின் நேரடிப் பொறுப்பில் பாதுகாக்கப்பட்டுள்ளது என்பதையே இந்தச் செய்தி கேள்விக் குறியாக்கி விடும்.

எனவே இந்த ஹதீஸை நாம் நிராகரித்துத் தான் ஆக வேண்டும்.

(இவ்வாறு ஹதீஸ் நிராகரிப்புக் கொள்கைக்காரர் தனது குர்ஆன் தமிழாகத்தின் விளக்கக் குறிப்பு பகுதியில் எழுதியுள்ளார் பக்கம் 1441, பதிப்பு 8)

இந்த ஹதீஹை நிராகரிப்பதற்குச் சொல்லும் காரணம் இதை நம்பினால் நபி(ஸல்) அவர்களுக்குப் பின் குர்ஆனில் ஒரு வசனம் நீக்கப்பட்டுள்ளது என்று நம்ப வேண்டிய நிலை ஏற்படும் என்பதுதான்.

உண்மையில் அப்படி ஒரு பாதகம் வருவதில்லை. எளிதாக புரிய வேண்டிய ஒன்றை பூதாகரமாகவும் தவறாகவும் சித்தரிக்கிறார்கள். இந்த ஹதீஸை ஏற்பதில் சிக்கல் இல்லை.

**முதலில் ஒன்றை கவனிக்க வேண்டும். இந்த ஹதீஸை இமாம் முஸ்லிம் மட்டுமின்றி திர்மிதி, நஸாயீ, இப்னு ஹிப்பான், தாரகுத்னீ, பைஹகி உள்ளிட்டோரும் பதிவு செய்துள்ளனர். அறிவிப்பாளர் தொடரில் பல அறிவிப்பாளர்களும் உள்ளனர். இந்த நூற்களின் ஆசிரியர்களும் ஆயிஷா (ரலி) அவர்கள் உள்ளிட்ட அறிவிப் பாளர்களும் இப்படி ஒரு வசனம் திருக்குர் ஆனில் இல்லை என்பதை அறிந்தே அறிவிக்கின்றனர். அப்படியானால் இவர் களெல்லாம் குர்ஆனில் ஒரு வசனம் நீக்கப்பட்டிருக்கிறது என்று நம்பிக்கை கொண்டவர்களா? இல்லை! ஒரு பேச்சுக்கு இவர் களெல்லாம் அப்படிச் சொல்வதாக இருந்தால், நபி(ஸல்) அவர்கள் மரணிக்கும் போது அந்த வசனம் குர்ஆனில் இருந்தது பிறகு**

**அது அகற்றப்பட்டது என்றுதான் அறிவித்திருப்பார்கள். ஆனால் இவ்வசனம் மக்கள் சிலரால் ஓதப்பட்டு வந்த காலத்தில் நபி(ஸல்) அவர்கள் மரணித்ததாக குறிப்பிடுகின்றனர்.**

அப்படியானால் அந்த வசனம் பற்றி இந்த ஹதீஸ் என்ன சொல்கிறது?

**திருக்குர்ஆனில் சில வசனங்களின் சட்டங்கள் வேறு சில வசனங்கள் மூலம் மாற்றப்பட்டுள்ளன. மாற்றப் பட்ட வசனமும் மாற்றிய வசனமும் குர்ஆனில் இருந்து கொண்டிருக்கும். இன்னும் சில வசனங்கள் அப்படியே குர்ஆனிலிருந்து எடுக்கப்பட்டுள்ளன. இந்த இரண்டு முறைக்கும் நஸ்க் என்று பெயர்.**

**இந்த இரண்டு முறையும் அல்லாஹுதஆலா தனது நபிக்கு அறிவித்தன் மூலம் நடந்ததாகும். இது குறித்து அல்லாஹ் இவ்வாறு கூறுகிறான்: ஏதேனும் ஒரு வசனத்தை நாம் மாற்றினால் அல்லது அதை மறக்கச் செய்தால் அதைவிடச் சிறந்ததை அல்லது அது போன்றதை நாம் கொண்டு வருவோம். அல்குர்ஆன் 2:106**

அல்லாஹுதஆலா நபிக்கு உத்தரவிடுவதன் மூலம் குர்ஆனிலிருந்து நீக்கி மறக்கச் செய்யும் வசனங்களில் ஒன்றாக இந்த வசனமும் உள்ளது என்பதை நாம் புரியலாம்.

இதன்படி பால்குடி தொடர்பான இந்த வசனத்தை நீக்க வேண்டுமென்ற அல்லாஹ்வின் உத்தரவு நபி(ஸல்) அவர்கள் மரணிப்பதற்கு சிறிது காலத்துக்கு முன்பு தான் வந்துள்ளது. அப்போது நபி(ஸல்) அவர்கள் மக்களுக்குத் தெரிவித்தார்கள். அந்த தகவல் கிடைத்தவர்கள் இந்த வசனத்தை ஓதுவதை நிறுத்தினார்கள். அந்த தகவல் கிடைக்காத சிலர் இந்த வசனத்தை ஓதிக்கொண்டிருந்தார்கள். தகவல் கிடைத்ததும் அவர்களும் நிறுத்தி விட்டார்கள்.

இதைப் புரிந்து கொண்டால் இந்த ஹதீஸை விளங்குவதில் சிக்கல் இல்லை. நிராகரிக்கவும் தேவையில்லை.

குர்ஆனில் சில வசனங்களின் சட்டம் மாற்றப்பட்டாலும் அவை ஓதப்பட்டுக் கொண்டுள்ளன. அதற்கு உதாரணம் மரண வேளையில்



பெற்றவர்களுக்கும் உறவினருக்கும் வசிய்யத் செய்ய வேண்டுமெனக் கூறும் (2:180) வசனம் சூரத்துன்னிசாவிலுள்ள வாரிசுரிமை தொடர்பான வசனங்கள் (4:11:12:176) மூலம் நஸ்க் (மாற்றம்) செய்ப்பட்டு விட்டது ஆயினும் குர்ஆனில் ஓதப்படுகிறது.

குர்ஆனிலிருந்து அல்லாஹ்வின் உத்தரவுப்படி அப்படியே எடுக்கப்பட்ட வசனங்களும் உள்ளன. உதாரணமாக பிஃரு மஊனாவில் எதிரிகளால் வஞ்சகமாகக் கொல்லப்பட்ட நபித்தோழர்கள் குறித்த வசனத்தைச் சொல்லலாம்.

“நாங்கள் எங்கள் இறைவனிடம் சென்று சேர்ந்து விட்டோம். அவன் எங்களைக் குறித்து திருப்தி அடைந்து விட்டான்; நாங்கள் அவனைக் குறித்து திருப்தி அடைந்தோம் என்று எங்கள் சமுதாயத்தாரிடம் தெரிவித்து விடுங்கள்” என்று ஒரு வசனம் குர்ஆனில் இறங்கியிருந்ததாகவும் தாங்கள் அதை ஓதி வந்ததாகவும் பின்பு அது நஸ்க் செய்யப்பட்டு விட்டதாகவும் அனஸ்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள். **பார்க்க: புகாரி 2801, 2814, முஸ்லிம்**

சில வசனம் குர்ஆனிலிருந்து அல்லாஹ்வின் உத்தரவுப்படி நீக்கப்பட்டுள்ளது. ஆனால் அதில் கூறப்ட்டிருந்த சட்டம் நபி(ஸல்) அவர்களால் தொடர்ந்து நடைமுறைப்படுத்தப்பட்டிருக்கிறது.

**இதற்கு உதாரணமாக புகாரியின் 6830வது ஹதீஸை எடுத்துக் கொள்ளலாம் அதில் உமர்(ரலி) அவர்கள் கூறுவது: “திண்ணமாக அல்லாஹ் முஹம்மது(ஸல்) அவர்களை சத்தியத்துடன் அனுப்பினான். மேலும் அவர்களுக்கு (குர்ஆன் எனும்) வேதத்தையும் அருளினான். அல்லாஹ் அருளிய (வேதத்)தில் கல்லெறி தண்டனை (ரஜ்ம்) குறித்த வசனம் இருந்தது. அதை நாங்கள் ஓதியிருக்கிறோம். அதைப் புரிந்து மனனமிட்டுமிருக்கிறோம்...”**

**(இது அபூதாவூத் 4420 திர்மிதி 1432 மற்றும் அஹ்மத் உள்ளிட்ட நூல்களிலும் இடம் பெற்றுள்ளது)**

குர்ஆனில் திருமணம் செய்தவர் விபச்சாரம் செய்தால் கல்லெறிந்து கொல்ல வேண்டும் என்று கூறும் வசனம் இப்போது இல்லை. ஆனால் அப்படி ஒரு வசனம் இறக்கப்பட்ட பின்பு நபியின்

காலத்திலேயே அல்லாஹ்வின் உத்தரவு மூலம் வார்த்தை மட்டும் நஸ்க் செய்யப்பட்டு சட்டம் தொடர்ந்து நடைமுறைப்படுத்தப்பட்டது.

ஆக இவ்விதங்களில் அமைந்த வசனம் பற்றிய செய்தியைத் தான் சம்பந்தப்பட்ட முஸ்லிம் நூலின் 2876, 2877 ஹதீஸ்கள் குறிப்பிடுகின்றன.

ஆகவே இந்த பெயர் தாங்கி தவ்ஹீத்வாதி சொல்வது போல் இந்த ஹதீஸை நிராகரிக்க ஒன்றுமில்லை.

இந்த ஹதீஸ், இஸ்லாத்தின் அடிப்படையை தகர்க்கும் கருத்தைக் கொண்டுள்ளதாகவும் திருக்குர்ஆனின் நம்பகத்தன்மைக்கு பாதிப்பு ஏற்படுத்துவதாகவும் இவர் தனது தர்ஜமாவில்எழுதி வைத்திருப்பது பிதற்றலாகும்.

**ஒரு ஹதீஸின் கருத்து தனக்குப் புரியாவிட்டால் ஹதீஸ் துறை அறிஞர்கள் கூறியுள்ள விளக்கங்களை, உண்மையைத் தெரிந்து கொள்ளும் நல்லெண்ணத்துடன் பார்க்க வேண்டும். எனக்குப் புரியாவிட்டால் அது ஹதீஸே இல்லை என்று சொல்வது அபூஜஹ்ல் தனம். இந்த அபூஜஹ்ல் தனமுள்ள ஒருவருக்கு தமிழ்நாட்டுத் தவ்ஹீத் கூட்டத்துக்கு தலைமை தாங்கும் தகுதி இல்லை. மட்டுமல்ல, தொண்டி என்ற சிற்றூரின் தவ்ஹீத் கூட்டத்துக்குக் கூட தலைமை தாங்குவதற்கு தகுதியில்லை. இந்த அபூஜஹ்ல் தனத்தை கைவிட்டால் இத்தனைக் குழப்பங்கள் இருக்காது: அல்லாஹ் நல்வழி காட்டுவானாக.**



# அத்தியாயம் - 3

தமிழ்நாட்டில் தவ்ஹீத் பெயரில் நுழைந்துள்ள ஹதீஸ் நிராகரிப்புக் கொள்கைக்கு குர்ஆன் ஹதீஸ் வழியில் இத்தொடரில் மறுப்பும் விளக்கமும் அளித்து வருகிறோம். இதன்மூலம் நல்ல பலன் கிடைத்துள்ளது. இந்த ஹதீஸ் நிராகரிப்புக் கொள்கைக் காரர்களின் எழுத்துக்களாலும் பேச்சுக்களாலும் தாக்கத்திற்கு ஆளாகியிருந்த பல சகோதரர்கள் இத்தொடர் மூலம் தெளிவடைந்துள்ளதாக தெரிவிக்கின்றனர். அல்ஹம்துலில்லாஹ்.

அதோடு ஹதீஸ் நிராகரிப்பாளரின் ஆதராவாளர் ஒருவர் ஏகத்துவத்தின் பெயரில் வெளிவரும் ஒரு பத்திரிக்கையில் நமது இத்தொடரை தாக்கி கடும் வெறியுடன் எழுதியிருக்கும் எழுத்துக்கள் இந்தத் தொடருக்கு நல்ல பலன் கிடைத்துள்ளது என்பதற்கு கூடுதல் அடையாளமாக உள்ளது.

சாலிம்(ரலி) அவர்களின் பால்குடித் தொடர்பான ஹதீஸுக்கான விளக்கத்தையும் ஹதீஸ் நிராகரிப்பாளர் அந்த ஹதீஸில் செய்திருந்த பித்தலாட்டத்தையும் மே 2013 இதழில் எழுதியிருந்தோம்.

தனது ஹதீஸ் நிராகரிப்புக் கொள்கையின் தலைவனுக்காக உணர்ச்சி வசப்பட்ட அவர் தங்களின் பத்திரிக்கையில் சகட்டு மேனிக்கு தாக்கியும் பொய்களை அள்ளித் தெளித்தும் எழுதியுள்ளார். அந்த ஹதீஸை மறுப்பதற்காக அதில் விளக்கமென்று எழுதப்பட்டுள்ள வற்றுக்கு சரியான தெளிவை இன்ஷாஅல்லாஹ் இந்த தொடரின் முடிவில் எழுதுவோம்.

அவர் பொய்யாகவும், தவறாகவும் எழுதியுள்ளவற்றுக்கு சில விளக்கங்களை இப்போது பதிவு செய்ய வேண்டியுள்ளது.

சூனியம் தொடர்பான நமது கட்டுரைக்கு அவர்கள் வரிக்கு வரி பதில் எழுதியதாகவும் அதற்கு எந்த பதிலையும் இதுவரை நாம் எழுதவில்லை என்றும் அவர்களின் ஜூன் 2013 இதழில் எழுதியுள் ளார்.

இந்த ஹதீஸ் நிராகரிப்பாளர்கள் பெரும் பொய்யர்கள் என்பதற்கு இது ஒரு தெளிவான ஆதாரம்.

சூனியம் தொடர்பான கட்டுரை நமது அல்ஜன்னத்தில் மே 2012 முதல் மார்ச் 2013 வரை (நவம்பர், டிசபர் 2012 சிறப்பிதழ் தவிர்த்து) ஒன்பது தொடர்களாக வெளிவந்தது. அதில் 8,9 (பிப்ரவரி, மார்ச் 2013) ஆகிய இரு தொடரிலும் அவர்கள் நமக்கு மறுப்பென்று எழுதியவற்றுக்கு தகுந்த சரியான விளக்கத்தை எழுதியிருந்தோம். அவர்கள் நமது முதல் தொடருக்கு மட்டுமே மறுப்பு எழுதியிருந்தார்கள். மற்ற ஆறு தொடர்களை கண்டும் காணாதது போல் இருந்து விட்டார்கள்.

இப்படி பகிரங்கமான விஷயத்தையே மறுத்து அடாவடியாக பொய் சொல்வார்கள் என்றால் இவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்பதை மக்கள் இலகுவாக முடிவு செய்து கொள்ளலாம்.

மேலும் அபூதாவூதில் 2063வது ஹதீஸுடன், பால் எடுத்துக் கொடுக்கப்பட்டது என்று இமாம் அபூதாவூத் குறிப்பிடுவதை நாம் எழுதியிருந்தோம் இதை அவதூறு என்று விமர்சித்திருக்கிறார்கள். அந்த விளக்கம் அல்மக்தபா அஷ்ஷாமிலா மென்பொருள் (3.28) பதிப்பிலுள்ள அபூதாவூத் நூலின் 2063வது ஹதீஸுடன் இடம் பெற்றுள்ளது.

ஆனால் வேறு பதிப்பில் அந்த தகவல் இல்லை என்பதை அவர்கள் சுட்டிக்காட்டிய பின்புதான் கவனித்தோம். எனவே அந்த விளக்கம் இமாம் அபூதாவூதே கொடுத்தது என்பது சந்தேகத்துக் குரியது என்பதை ஒப்புக் கொள்கிறோம். ஹதீஸ் வாசகம் முடிந்ததும் அடுத்த வரியிலேயே அந்த விளக்கம் இடம் பெற்றுள்ளதால் இமாம் அபூதாவூத் அளிக்கும் விளக்கமாக தோன்றுகிறது. நாம் அவதூறாக அதைக் கூறவில்லை.

ஆனாலும் அறிஞர்கள், "ஸாலிம்(ரலி) அவர்களுக்கு பால் எடுத்துக் கொடுக்கப்பட்டது எனும் இக்கருத்தை கூறியிருக்கிறார்கள்" என்பது பிரபலமானது, முஸ்லிமின் விளக்கவுரையில் இமாம் நவவீ அவர்கள் இது போன்ற கருத்து கூறப்பட்டுள்ளதை எடுத்து எழுதி யிருப்பது பிரபலமான செய்திதான்.

தங்களின் தன்மைக்குத் தகுந்தவாறு அக்கட்டுரையில் கீழ்த் தரமாக பல இடங்களில் எழுதியிருக்கிறார்கள். அதைப் படிப்பவர்கள் யாரும் அவர்களின் தரத்தை தெரிந்து கொள்ளலாம். முன்பு நாம் குறிப்பிட்டது போல் இந்த ஹதீஸ் தொடர்பாக அவர்கள் எழுதியுள்ள



தவறான கருத்துக்களுக்கு பின்பு விளக்கமளிப்போம் - இன்ஷா அல்லாஹ்! இப்போது ஹதீஸ் நிராகரிப்பாளர் நிராகரிக்கும் அடுத்த ஹதீஸை பார்ப்போம்.

**அபூஹுரைரா(ரலி) அவர்கள் கூறியதாவது (ஒருமுறை இறைத்தூதர்) தாவூத்(அலை) அவர்களுடைய புதல்வர் சுலைமான் (அலை) அவர்கள் "நான் இன்றிரவு (என்னுடைய) நூறு துணைவி யரிடமும் சென்று வருவேன். அப்பெண்களில் ஒவ்வொருவரும் இறைவழியில் அறப்போர் புரியும் (வீரக்) குழந்தை ஒன்றைப் பெற்றெடுப்பார்கள்" என்று கூறினார்கள். அப்போது (சுலைமான் (அலை) அவர்களிடம் அந்த வானவர் (ஜிப்ரீல்) "இன்ஷா அல்லாஹ் – இறைவன் நாடினால்" என்று (சேர்த்துச்) சொல்லுங்கள் என்றார். ஆனால் சுலைமான் (அலை) அவர்கள், இன்ஷா அல்லாஹ் என்று கூறவில்லை. மறந்து விட்டார்கள். அவ்வாறே சுலைமான்(அலை) அவர்களும் தன் துணைவியரிடம் சென் றார்கள். ஒரே ஒரு மனைவியைத் தவிர வேறெவரும் குழந்தை பெற்றெடுக்க வில்லை. அந்த ஒரு மனைவியும் (ஒரு புஜமுடைய) அரை மனிதரைத் தான் பெற்றெடுத்தார்.**

**நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: அவர் இன்ஷா அல்லாஹ் – இறைவன் நாடினால் என்று கூறியிருந்தால் அவர் தமது சத்தியத்தை முறித்திருக்க மாட்டார். (சபதத்தை நிறைவேற்றி யிருப்பார்) தம் தேவை நிறைவேறுவதைப் பெரிதும் அவர் நம்பியிருப்பார்.**

இந்த ஹதீஸை இவர் நிராகரிப்பதற்கான காரணத்தையும் அதற்கான விளக்கத்தையும் பார்ப்பதற்குமுன்னர் இந்த ஹதீஸின் பலத்தை குறித்து தெரிந்து கொள்ள வேண்டும். இந்த ஹதீஸை அபூஹுரைரா(ரலி) அவர்களிடமிருந்து பல பிரபலமான சிறந்த தாபிஈன்கள் கேட்டு அறிவித்துள்ளார்கள்.

அவர்கள்: 1. அப்துர் ரஹ்மான் அல்அஃரஜ், 2. தாவூஸ், 3. இப்னு ஸீரீன், 4. முஹம்மத்

இந்த நால்வரிடமிருந்து பல மாணவர்கள் அறிவித்துள்ளார்கள். ஆக இந்த ஹதீஸ் மிக வலுவான பிரபலமான ஹதீஸ் ஆகும்.

இந்த ஹதீஸின் செய்தியை நம்புவதில் இவருக்கும் என்ன பிரச்சனையாம்?

சொல்கிறார்:- "ஒரு இரவில் அனைவருடனும் உடலுறவு கொள்வது சாத்தியமற்றதாகும்".

**உடல் பலத்தைக் குறித்து இவ்வாறு கூறினால் ஜின்களை கட்டுப்படுத்துவது, காற்றை தன் விருப்பப்படி பயன்படுத்துவது என்ற மிக அதிசயமான விஷயங்களோடு ஒப்பிட்டால் இது சாத்தியமற்றதல்ல என்பது நமது விளக்கம்.**

**ஒரே இரவில் அத்தனை பேருடனும் உடலுறவு கொள்வதற்கு நேரம் போதாது என்ற அர்த்தத்தில் சொல்வாரானால், இன்று இரவு இதைச் செய்வேன் என்று சொல்லி ஒரு செயலைச் செய்ய ஆரம்பித்த பின் அந்த இரவிலேயே அதைச் செய்து முடியா விட்டால் தொடர்ந்து வரும் பகல், இரவில் அந்தச் செயலை செய்யலாம். இதிலே சாத்தியமற்றது என்று சொல்வது அர்த்தமற்றது என்பதை உணர வேண்டும்.**

அடுத்து இந்த ஹதீஸை மறுப்பதற்கு பெரிதாக இவர் எடுத்து வைக்கும் வாதம். "அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் அறிய இயலாத ஐந்த விஷயங்களில் ஒன்று கருவறைகளில் உள்ளதை பற்றிய அறிவு. (அல்குர்ஆன் 31:34) அப்படியிருக்கையில் சுலைமான் (அலை) அவர்கள் தமது நூறு மனைவியரும் அந்த இரவில் ஆண்பிள்ளை களைக் கருவுறுவார்கள் என்று எப்படிச் சொல்லியிருக்க முடியும்" என்பதாகும்.

**அல்லாஹுதஆலா தமக்குச் செய்துள்ள அருட்கொடைகளை வைத்து, தான் ஆசைப்படும் இதனையும் அவன் நிறைவேற்றித் தருவான் என்ற கூடுதல் எதிர்ப்பார்ப்பில் இதைச் சொல்லியிருக்கி றார்கள். அதைச் சொல்லும் போது ஏற்பட்ட (இன்ஷா அல்லாஹ் சொல்லாத) குறையினால் அல்லாஹ் அதனை நிறைவேற்றிக் கொடுக்கவில்லை.**

பொதுவாக நபிமார்களைப் பொருத்தவரை அல்லாஹ்வுடன் உள்ள நெருக்கத்தின் காரணமாக அவனிடம் கூடுதல் உரிமையை எடுத்துக் கொள்கிறார்கள். **உதாரணத்துக்கு ஸகரிய்யா(அலை)**



**அவர்கள் வயது முதிர்ந்த நிலையில் குழந்தை வேண்டுமென்று துஆ செய்கிறார்கள். அல்லாஹுதஆலா அதை ஏற்று குழந்தை கொடுப்பதாகச் சுபச் செய்தி கூறினான். உடனே ஸகரிய்யா (அலை) அவர்கள், எனக்கு வயதாகி விட்டது என் மனைவி மலட்டுத் தன்மையுள்ளவளாக இருக்கும் போது எப்படி குழந்தை பிறக்க இயலும் என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ் இது தனக்கு இலகுவானதுதான் என்று பதில் அளித்தான். அப்போதும் அல்லாஹ்வுடைய வார்த்தையை ஏற்றுக் கொண்டு அமைதியா காமல் அதற்காக தனக்கு ஓர் அத்தாட்சியைத் தரவேண்டும் என ஸகரிய்யா (அலை) அவர்கள் கேட்டார்கள். (இத்தகவல் திருகுர்ஆனின் 19வது அத்தியாயமான சூரத்து மர்யமின் துவக்கப் பகுதியில் இடம் பெற்றுள்ளது)**

ஆக இதுபோல் அதிக உரிமை எடுத்துக் கொண்டு சுலைமான் (அலை) தன் ஆவல் நிறைவேறும் என்ற நம்பிக்கையுடன் பேசி னார்கள். ஆனால் அதில் ஒரு குறை நிகழ்ந்து விட்டது. எனவே அவர்கள் நாடியது கிடைக்க வில்லை. இது நம்புவதற்குச் சிரமமானதல்ல.

சுலைமான்(அலை) அவர்களின் பேச்சுக்கு இன்னொரு விதமாகவும் விளக்கம் சொல்லலாம். அதாவது யாருக்கும் வழங்காத ஆட்சியை தனக்கு வழங்குமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்திருந்தார்கள். அதில் ஒன்றாக இதையும் அல்லாஹ் தனக்கு தரவேண்டுமென்று விரும்பி இவ்வாறு கூறியிருக்கலாம். அதைக் கூறும் போது ஏற்பட்ட குறையால் அது நிறைவேறவில்லை.

**அடுத்து இந்த ஹதீஸை நம்பாமல் இருக்க இவர் சொல்லும் இன்னொரு காரணம், வானவர் இன்ஷா அல்லாஹ் கூறும்படி சொன்னபின்பும் எப்படி அதைக் கூறாமல் விட்டிருப்பார்கள் என்பதாகும்.**

**ஹதீஸில், "வானவர் இன்ஷாஅல்லாஹ் என்று சொல்லுங்கள் என்றார். சுலைமான்(அலை) அவர்கள் இன்ஷா அல்லாஹ் என்று கூறவில்லை; மறந்து விட்டார்கள்" என்று உள்ளது.**

**அதாவது வானவர் இன்ஷாஅல்லாஹ் சொல்லுங்கள் என்று கூறிய நேரத்தில் சுலைமான்(அலை) அவர்கள் வேறு விஷயம் பேசிக் கொண்டிருந்திருக்கிறார்கள். அதை முடித்துவிட்டு**

**இன்ஷாஅல்லாஹ் கூறிக்கொள்ளலாம் என்று இருந்திருக்கி றார்கள். ஆனால் அப்படியே அது மறந்து போய்விட்டது.**

இது போல் ஏற்படுவது இயல்பு தான். நாமும் கூட ஒரு விஷயத்தை பேசும் போது இன்னொரு விஷயம் நினைவுக்கு வந்தால் நம் பேச்சை முடித்து விட்டு அதைச் சொல்வோம் என்று நினைப்போம் ஆனால் முந்தைய பேச்சை முடிக்கிற போது இரண்டாவது சொல்ல நினைத்தது மறந்து போயிருக்கும். இது மனித இயல்பு. ஆக இந்த ஹதீஸின் செய்தி நம்ப வேண்டிய ஒன்றுதான்.

ஆனால் ''இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கையைத் தகர்க்கும் வகையில் இது அமைந்திருப்பதாக'' எழுதியுள்ளார். (பார்க்க: ஹதீஸ் நிராகரிப்பாளரின் தர்ஜமா விளக்கப்பகுதி பக்கம்: 1443, பதிப்பு: 8)

நாம் இந்த ஹதீஸை படிக்கும் போது அப்படியெல்லாம் கருத்து வரவில்லை இவருடைய கூற்றுப்படி புகாரி, முஸ்லிம் உள்ளிட்ட இமாம்கள் இந்த ஹதீஸை பதிவு செய்து இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கையை தகர்த்து விட்டார்கள் என்று சொல்ல வேண்டிய நிலை ஏற்படுகிறது. அப்படிச் சொன்னால் அது பெரிய இட்டுக் கட்டுதான். ஹதீஸ் துறை இமாம்கள் மீது இட்டுக்கட்டும் இவரது வாதம் மகாத் தவறு என்பது நிச்சயமாகிறது.

அத்துடன் இந்த ஹதீஸை நிராகரிப்பதற்கு இதன் சில அறிவிப்பு களில் சுலைமான்(அலை) அவர்களின் மனைவியர் எண்ணிக்கை வித்தியாசமாக கூறப்பட்டிருப்பதைக் காணமாகச் சொல்கிறார்.

அதாவது ஒரு அறிவிப்பில் நூறு என்றும் இன்னொரு அறிவிப்பில் தொண்ணூறு என்றும் இன்னொரு அறிவிப்பில் எழுபது என்றும் மற்றொரு அறிவிப்பில் அறுபது என்றும் கூறப்பட்டுள்ளது.

உண்மையில் வெவ்வேறு அறிவிப்புகளில் வரும் இந்த எண்ணிக்கை வேறுபாடு இந்த செய்திக்கு வலுவூட்டத்தான் செய்கிறது. எப்படியெனில் இப்படி எண்ணிக்கையை குறிப்பிடுவதில் வேறுபடும் இந்த அறிவிப்புக்களிலெல்லாம் சுலைமான் (அலை) அவர்களுக்கு அதிக எண்ணிக்கையில் மனைவியர் இருந்தனர் என்பதும் ஒரு இரவில் அவர்களனைவரிடமும் உடலுறவுக்கச் செல்வேன் என்று அவர்கள் கூறியதும் அதன் மூலம் அல்லாஹ்வின் வழியில் போரிடும்



பிள்ளைகள் பிறப்பார்கள் என்று கூறியதும் இன்ஷா அல்லாஹ் என்பதை கூறாமல் மறந்து விட்டதும் ஒருமித்து கூறப்பட்டுள்ளன.

ஆக மனைவியர் எண்ணிக்கை விஷயத்தில் வேறுபாட்டுடன் இருந்தாலும் மேற்கண்ட மையக்கருத்துகள் எல்லா அறிவிப்புக் களிலும் ஒன்று போல் சொல்லப்பட்டிருப்பதால் இந்த சம்பவம் நடந்தது உறுதியாகிறது.

**இதனால்தான் வெவ்வேறு அறிவிப்புக்களில் மனைவியர் எண்ணிக்கை றேபட்டிருப்பதைக் காரணம் காட்டி எந்த ஹதீஸ் கலை அறிஞரும் இந்த ஹதீஸை பலவீனப்படுத்தவில்லை.**

**ஆதாரப்பூர்வமான ஹதீஸ்கள் பலவற்றில் மையக்கருத்து ஒன்றுபட்டும் சிற்சில விஷயங்கள் வித்தியாசப்பட்டும் பதிவு செய்யப்பட்டுள்ளன. அந்த ஹதீஸ்களையெல்லாம் அத்தகைய வித்தியாசங்களை காரணம் காட்டி யாரும் மறுப்பதில்லை.**

இதற்கு உதாரணமாக மிஃராஜ் தொடர்பான ஆதாரப் பூர்வமான ஹதீஸ்களை எடுத்துக் கொள்ளலாம். அவற்றில் எந்த வானத்தில் எந்த நபியை நபி(ஸல்) அவர்கள் பார்த்தார்கள் என்பதிலும் எந்த வானத்தில் சித்ரத்துல் முன்தஹா மற்றும் பைத்துல் மஃமூரை பார்த்தார்கள் என்பதிலும் இன்னும் சில விஷயங்களிலும் வித்தியாசமாக வெவ்வேறு அறிவிப்புகளில் கூறப்பட்டுள்ளன. இதைக் காரணம் காட்டி யாரும் மிஃராஜ் சம்பவத்தையே அடியோடு மறுப்பதில்லை மறுக்கவும் முடியாது.

நபிமார்கள் மற்றும் முன்னோர் வரலாற்றில் வித்தியாசமான நிகழ்வுகள் தான் நபி(ஸல்) அவர்களால் சொல்லிக்காட்டப்படும். அந்த வகையில் இந்தச் சம்பவமும் வித்தியாசமான நிகழ்வைக் குறிப்பிடு கிறது. அதிக எண்ணிக்கையிலான மனைவியர் சுலைமான் நபிக்கு இருந்தனர் என்ற இந்த ஹதீஸின் செய்தி அவர்களின் வரலாற்றிலும் கூறப்பட்டிருப்பது இந்த ஹதீஸுக்கு வலுச் சேர்க்கிறது.

இந்த ஹதீஸை சிக்கலில்லாமல் புரிவதற்கு நாம் கூறியுள்ள விளக்கங்கள் பல முற்கால ஹதீஸ் கலை அறிஞர்களால் கூறப்பட்டுள்ளன.

அல்லாஹுதஆலா உண்மையை அறிந்து கொள்ள நம் அனைவருக்கும் நல்லுதவி செய்வானாக!

# அத்தியாயம் 4

தவ்ஹீத் கூட்டத்துக்கு தலைவர் என்று சொல்லிக் கொள்ளும் ஹதீஸ் நிராகரிப்பாளர் எழுதியுள்ள திருக்குர்ஆன் மொழி பெயர்ப்பின் விளக்கப்பகுதியில் நிராகரித்துள்ள ஹதீஸ்களுக்கான விளக்கத்தை இத்தொடரில் பார்த்து வருகிறோம்.

அவற்றில் மூஸா(அலை) அவர்கள், உயிரைக் கைப்பற்றும் வானவரான மலகுல் மவ்த்தை அறைந்தது பற்றிய ஹதீஸும் ஒன்று. முதலில் அந்த ஹதீஸின் முழுமையான தமிழாக்கத்தையும் அதன்பின் ஹதீஸ் நிராகரிப்பாளருக்கு அதை நம்புவதில் என்ன பிரச்சனை என்பதையும் அதற்கான விளக்கத்தையும் பார்ப்போம்.

**“மலக்குல் மவ்த்” (உயிரை எடுத்துச் செல்லவரும் வானவர்) மூஸா(அலை) அவர்களிடம் அனுப்பப்பட்டார், தம்மிடம் அவர் வந்த போது மூஸா(அலை) அவர்கள் அவரை (முகத்தில்) அறைந்து விட்டார்கள். உடனே அவர் தம் இறைவனிடம் திரும்பிச் சென்று, மரணத்தை விரும்பாத ஓர் அடியாரிடம் என்னை நீ அனுப்பி விட்டாய் என்று கூறினார். இறைவன் நீ அவரிடம் திரும்பிச் சென்று அவரது கையை ஒரு காளை மாட்டின் முதுகின் மீது வைக்கச் சொல் (அதன் முதுகிலுள்ள முடிகளில் எந்த அளவிற்கு) அவரது கரம் மூடுகின்றதோ (அதில்) ஒவ்வொரு முடிக்குப் பகரமாக ஓர் ஆண்டு (இந்த உலகில் வாழ) அவருக்கு அனுமதி உண்டு (என்று சொல்) எனக் கூறினான். (அவ்வாறே அந்த வானவர் திரும்பிச் சென்று மூஸா(அலை) அவர்களிடம் கூறிய போது அவர், இறைவா! (அத்தனை காலம் வாழ்ந்து முடிந்து) பிறகு என்ன நடக்கும்? என்று கேட்டார், இறைவன், மரணம் தான் என்று பதிலளித்தான். மூஸா (அலை) அப்படியென்றால் இப்போதே என் உயிரை எடுத்துக் கொள் என்று கூறிவிட்டு (பைத்துல் மக்திஸ் எனும்) புனித பூமிக்கு நெருக்கமாக அடக்கத்தலம் அமைந்திடச் செய்யுமாறு அல்லாஹ்விடம் வேண்டினார்கள்.**

**(இதை எடுத்துரைத்த போது) அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள், நான் அங்கு( பைத்துல் மக்திஸில்) இருந்திருந்தால் சாலையோரமாக செம்மணற்குன்றின் கீழே அவரது மண்ணறை இருப்பதை உங்களுக்குக் காட்டியிருப்பேன் என்று கூறினார்கள்.**

அறிவிப்பாளர்: அபூஹுரைரா(ரலி) நூல்: புகாரி 3407



இந்த ஹதீஸை நிராகரிப்பதற்கு இந்த ஹதீஸ் நிராகரிப்பாளர் சொல்லும் காரணம் என்னவாம்? அவர் எழுதுவதைப் பாருங்கள்:

“இந்த ஹதீஸைப் பொறுத்தவரை திருக்குர்ஆனின் ஏராளமான வசனங்களுடன் முரண்பட்டு நிற்கிறது” இவ்வாறு எழுதிவிட்டு, வானவர்கள் அல்லாஹ்வின் கட்டளையை செயல்படுத்துவார்கள். அவனுக்கு மாறு செய்ய மாட்டார்கள் என்ற கருத்தைக் கொண்ட திருக்குர்ஆன் வசனங்களை எடுத்தெழுதியுள்ளார். (அவ்வசனங்கள்: 16:49, 50 / 21:26, 27 / 66:6)

அதற்குப் பின் இவ்வாறு எழுதுகிறார். இறைவன் எந்தப் பணிக்காக அனுப்பினானோ அதைச் செய்து முடிப்பது தான் வானவர்களின் இலக்கணம், மூஸா நபியின் உயிரைக் கைப்பற்ற ஒரு வானவரை இறைவன் அனுப்பினால் அவர் அந்த வேலையைச் செய்யாமல் திரும்ப மாட்டார் இந்த இலக்கணத்துக்கு எதிரான கருத்தை அந்த ஹதீஸ் கூறுகிறது.

**(பார்க்க: ஹதீஸ் நிராகரிப்பாளரின் திருக்குர்ஆன் தமிழாக்கம் பக்: 1444, 1445, பதிப்பு: 8)**

இது ஒரு தவறான வாதம், இந்தத் தவறான வாதத்துக்குக் காரணம், இதற்கு விளக்கமாக அமையும் வேறு ஹதீஸை கவனிக்காதது.

“உலக வாழ்வு, மறுமை வாழ்வு ஆகிய இரண்டில் தாம் விரும்பியதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் வாய்ப்பு வழங்கப் படாமல் எந்த இறைத்தூதரும் இறப்பதில்லை” என்பது நபிமொழி.

**நூல்: புகாரி 4435, 4437**

இந்த நபிமொழிப்படி மூஸா(அலை) அவர்களுக்கும் அந்த வாய்ப்பு வழங்கப்பட வேண்டும். அந்த வாய்ப்பு வழங்கப்படாமல் மலக்குல் மவ்த் உயிர் பறிக்க வருவதாக உணர்ந்த மூஸா(அலை) அவர்கள் அவரை அறைந்துள்ளார்கள். மூஸா(அலை) அவர்கள் அதிகம் உணர்ச்சி வசப்படக் கூடியவர்கள் என்பது குர்ஆன் ஹதீஸ் மூலம் அனைவரும் அறிந்தது தான்.

**மலக்கு எப்படி அல்லாஹ்வின் கட்டளையை நிறைவேற்றாமல் திரும்பிச் செல்வார் என்றால், அந்த முதல் தடவையிலேயே மூஸா (அலை) அவர்களின் உயிரைக் கைப்பற்ற வேண்டுமென்று, அல்லாஹ் நாடியிருக்கவில்லை என்பது அந்த ஹதீஸை முழுமையாகப் படிக்கும் போது தெரிந்துகொள்ள முடிகிறது.**

**அத்துடன் அல்லாஹ்வின் உத்தரவை நிறைவேற்றச் சென்றாலும் அப்போது மூஸா நபியின் எதிர்வினை எப்படி இருக்கிறதோ அதற்குத் தகுந்தவாறு நடந்து கொள்ள வேண்டும் என்பது அந்த வானவருக்கு அல்லாஹ் இட்ட கட்டளை என்பது அந்த ஹதீஸை படிக்கும் போது நமக்கு புரிகிறது.**

இப்போது முதல் தடவையிலேயே மூஸா நபியின் உயிரைக் கைப்பற்ற நாடியிருக்காத அல்லாஹ் ஏன் மலக்குல் மவ்த்தை அனுப்ப வேண்டும்? என்று கேள்வி எழுப்பலாம். ஒரு சோதனையாகத்தான் அல்லாஹ் இதனை நடத்தியிருக்கிறான். இந்த சோதனை மூலம் பல நூறு வருடங்கள் உயிர் வாழ வாய்ப்புக் கொடுக்கப்பட்ட போதும் அவ்வாறு வாழ்வதை மூஸா நபியவர்கள் தேர்வு செய்யவில்லை என்பதை அல்லாஹ் வெளிப்படுத்தியுள்ளான். அத்துடன் உணர்ச்சி வசப்படுதல் என்ற மனித பலவீனம் நபிமார்களிடமும் அவ்வப் போது வெளிப்படும் என்பது போன்ற செய்தியும் இதிலுள்ளது.

ஆகவே மலக்குல் மவ்த் அல்லாஹ்வின் கட்டளையை நிறைவேற்றாமல் திரும்பிச் செல்வாரா? என்ற கேள்வின் அடிப்படையில் இந்த ஹதீஸை மறுப்பது மிகப் பெரிய தவறாகும்.

அடுத்து ஹதீஸ் நிராகரிப்பாளர் எடுத்து வைக்கும் கருத்து:

“இவ்வுலக வாழ்க்கை அற்பமானது என்பது நபிமார்களின் போதனை தமக்கு மரணம் வந்து விட்டால் மூஸா நபி அதற்கு தயாரா வார்கள். எதிர் நடவடிக்கையை மேற்கொள்ள மாட்டார்கள். மேலும் வானவர்கள் அல்லாஹ்வின் உத்தரவுப்படிதான் செயல்படுவார்கள் என்பது நமக்கே தெரியும் போது மூஸா நபிக்கு தெரியாமல் இருக்க முடியாது” (பக்: 1445, பதிப்பு: 8)

இந்த கருத்து சரிதான் என்றாலும் இதன் அடிப்படையில் மேற்கண்ட ஹதீஸை மறுக்க வேண்டும் என்று வாதிப்பது தவறு. இந்த கருத்துடன் முரண்படாமல் இந்த ஹதீஸை புரிய முடியும்.

அல்லாஹுதஆலா மூஸா(அலை) அவர்களையும் இஸ்ரவேலர் களையும் ஃபிர் அவ்னிடமிருந்து காப்பாற்றிய பின் புனித பூமியான பைத்துல் முகத்தஸை அவர்களுக்கு வழங்குவதாக வாக்களித்து அங்கிருந்தவர்களுடன் போரிட வேண்டுமென்று கட்டளையிட்டான். அப்போது இஸ்ரவேலர்கள் போரிட மறுத்தார்கள். அதனால் அல்லாஹுதஆலா பைத்துல் முகத்தஸில் இஸ்ரவேலர்கள் நுழை



வதை நாற்பது வருடங்களுக்கு தடை செய்வதாக மூஸா(அலை) அவர்களுக்கு அறிவித்தான்.

இச்செய்திகள் திருக்குர்ஆனில் 5வது அத்தியாயத்தின் 20வது வசனம் முதல் 26வது வசனம் வரை உள்ள பகுதியில் இடம் பெற்றுள்ளன.

நாற்பது வருடங்களுக்குப் பின்னால் பைத்துல் முகத்தஸில் நுழைவதற்கு அல்லாஹ் வாய்ப்பை வழங்கும்போது தாமும் நுழை வோம் என்ற ஆர்வமும் எதிர்பார்ப்பும் மூஸா(அலை) அவர்களிடம் இருந்துள்ளது. அதற்கு இந்த ஹதீஸிலுள்ள ஒரு செய்தியும் ஆதாரமாக உள்ளது. பைத்துல் முகத்தஸ் புனித பூமிக்கு கல்லெறியும் தூரத்தில் தான் அடக்கப்பட வேண்டும் என்று மூஸா(அலை) அல்லாஹ்விடம் கேட்டுக் கொண்டதாக இந்த ஹதீஸில் குறிப்பிடப்பட்டுள்ளது.

தான் ஆவலுடனும் எதிர்பார்ப்புடனும் இருக்கும் ஒன்று நிறைவேறாதுபோகும் என்பதை உணர்த்தும் விதத்தில் மலக்குல் மவ்த் வந்ததைக் கண்டதும் மூஸா(அலை) அவர்கள் உணர்ச்சி வசப்பட்டுள் ளார்கள். அத்துடன் அவர் மனிதத் தோற்றத்திலும் இருந்துள்ளதால் அந்த உணர்ச்சி வசப்படுதலை வெளிப்படுத்துவதற்கு ஏதுவாகி விட்டது. மூஸா(அலை) அவர்கள் அதிகம் உணர்ச்சி வசப்படக் கூடியவர்கள் என்பது குர்ஆன் ஹதீஸ் மூலம் தெரிந்தது தான்.

மூஸா(அலை) அவர்களுக்கு உலகப் பற்றில்லை மறுமையைத் தான் மேலாக மதித்தார்கள் என்பதை இந்த ஹதீஸும் சொல்லத்தான் செய்கிறது ஆகவே இது போன்ற வாதத்தை வைத்து இந்த ஹதீஸை மறுப்பது தவறு. இரண்டாவது தடவை மலக்குல் மவ்த் வரும் போது பல நூறு வருடங்கள் வாழ்வதற்கு வாய்ப்பு இருக்கிறது என்று கூறப்பட்ட போதும் அப்போதே மரணிப்பதைத் தேர்ந்தெடுத்தார்கள் என்பது இதே ஹதீஸிலுள்ள செய்தியாகும்.

**அடுத்து, இந்த ஹதீஸை நிராகரிப்பதற்கு இந்த ஹதீஸ் நிராகரிப்பாளர் கதைக்கும் வாதம் வேடிக்கையாகவும் இந்த அளவுக்கு இவர் நிலை போய் விட்டதே என்று நாம் வேதனைப் படத்தக்க விதத்திலும் அமைந்துள்ளது.**

**மூஸா(அலை) அவர்கள் மலக்குல் மவ்த்தை அறைந்தது அல்லாஹ்வையே எதிர்த்து நின்றதற்குச் சமம். அப்படி நடந் திருந்தால் யூனுஸ்(அலை) அவர்களுடன் நடந்து கொண்டது போல்**

**அல்லாஹ் மூஸா நபியுடனும் நடந்திருப்பான் என்று சொல்கிறார். அத்துடன் பலவிதமாக மிகைப்படுத்தியும் பிதற்றியும் எழுதியுள் ளதை அதைப் படித்துப் பார்க்கும் சரியான புத்தியுள்ள ஒவ்வொரு முஸ்லிமும் விளங்கிக் கொள்ள முடியும். (பார்க்க ஹதீஸ் நிராக ரிப்பாளரின் குர்ஆன் தமிழாக்கம் பக்: 1445, 1446, பதிப்பு: 8)**

**இந்த மிகை வாதத்துக்கும் பிதற்றலுக்கும் பதில் என்ன வென்றால், நபிமார்களுக்கு வழங்கப்படக் கூடிய உலகத்தில் கூடுதல் காலம் வாழ்வது அல்லது மரணிப்பது ஆகிய இரண்டில் ஒன்றை தேர்வு செய்வதற்கான வாய்ப்பு வழங்கப்பட்டாத நிலையில் மனித வடிவில் வந்த வானவரை அறைவது அல்லாஹ்வை எதிர்ப்பதாகாது.**

அத்துடன் யூனுஸ்(அலை) அவர்கள் நடந்து கொண்டதற்கும் மூஸா(அலை) அவர்கள் நடந்து கொண்டதற்கும் நிறைய வித்தியாசம் உள்ளது. யூனுஸ் நபி அல்லாஹுதஆலா செய்து முடித்துவிட்ட ஒன்றுக்காக கோபம் கொண்டார்கள். மூஸா நபியின் சம்பவம் அது போன்றதல்ல அத்துடன் நாற்பது வருடங்களுக்குப் பின் அல்லாஹ் வழங்குவதாக வாக்களித்திருந்த பைத்துல் முகத்தஸ் வெற்றி அவர்கள் தலைமையிலேயே கிடைக்கும் என்று அவர்கள் எண்ணும் விதத்தில் இருந்துள்ளது. இதற்கு மாற்றமான செய்தியுடன் மனித வடிவில் வந்த வானவரிடம் மூஸா நபி உணர்ச்சி வசப்பட்டார்கள். இதனை அல்லாஹ்வையே எதிர்த்து நிற்பது என்று சித்தரிப்பது தவறு.

**ஒரு வாதத்துக்கு இவர் மிகைப்படுத்துவது போல் மூஸா (அலை) அவர்கள் நடந்து கொண்டது பெரிய தவறு என்று வைத்துக் கொண்டால் கூட தண்டிப்பதும் மன்னிப்பதும் அல்லாஹ்வின் நாட்டத்திற்குட்பட்டதாகும். அல்லாஹ் தண்டிக்கத் தான் செய்வான் என்று பேசுவது அதிகப் பிரசங்கித்தனமாகும்.**

ஆக இந்த ஹதீஸைப் பொறுத்தவரை இந்த ஹதீஸ் நிராகரிப் பாளர் சொல்வதைப் போல் குர்ஆனுக்கு முரண்படவில்லை என்பது தெள்ளத் தெளிவாகி விட்டது.

**இவருக்கும் பொதுவாக எல்லோருக்கும் நாம் சொல்வது என்னவென்றால் ஒரு ஹதீஸ் புரிவதற்குச் சிரமமாக இருந்தால் குர்ஆன் வசனங்களையும் ஹதீஸ்களையும் விளக்கமாக வைத்து புரிவதற்கு முயற்சிக்க வேண்டும். இந்த முறையில், நபிமொழி**



**களைப் பதிவதிலும் அதை மக்களிடம் சேர்ப்பதிலும் தங்கள் வாழ்வையே அர்ப்பணித்த மார்க்க அறிஞர்கள் எவ்விதம் விளங்கியுள்ளார்கள், விளக்கியுள்ளார்கள் என்று பார்க்க வேண்டும்.**

இதற்கு மாற்றமாக குர்ஆனுக்கு முரண்படுவதாக நமது அறிவுக்கு தோன்றி விட்டாலே அத்தகைய ஹதீஸை தூக்கி எறிந்து விடலாம் என்ற அலட்சியப் போக்குடன் நடந்து கொண்டால் எளிதாக புரிந்து கொள்ளக் கூடிய ஹதீஸைக் கூட குர்ஆனுக்கு முரண்படுகிறது, அறிவுக்குப் பொருந்தவில்லை என்று கூறி நிராகரிக்கும் நிலை ஏற்படும். அதுதான் இப்போது நடந்து கொண்டிருக்கிறது. அல்லாஹ் காப்பாற்ற வேண்டும்!

இது வரை, தவ்ஹீது பெயரில் செயல்படும் ஹதீஸ் நிராகரிப்பாளர் தனது திருக்குர்ஆன் தமிழாக்கத்தின் விளக்கக் குறிப்பு எண் 357ல் நிராகரித்துள்ள ஹதீஸ்களுக்கான விளக்கத்தை பார்த்துள்ளோம். அவ்விளக்கக் குறிப்பில் நபி(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப் பட்டது தொடர்பான ஹதீஸை நிராகரிக்கும் வாதங்களுக்கு முன்பு "சூனியம்" என்ற தலைப்பில் ஒன்பது தொடர்களில் விளக்கமளித்தி ருந்தோம்.

ஆக அதில் நிராகரிக்கப்பட்டுள்ள மொத்த ஐந்து ஹதீஸ்களுக்கும் குர்ஆன், ஹதீஸ் ஆதாரங்களுடன் அவ்விரண்டின் வழிநடந்த அறிஞர்களின் வழிமுறையில் விளக்கம் அளித்துள்ளோம் அல்ஹம்து லில்லாஹ்.

ஹதீஸ் நிராகரிப்பாளர் அமைதியாக இருக்கிறார். அவரது நிராகரிப்புக் கொள்கையை ஏற்றுக் கொண்ட சிலர் நமக்கு மறுப்பளிப் பதாகச் சொல்லிக் கொண்டு தவறான கருத்துக்களை எழுதியுள்ளார்கள். இவர்கள் எழுதியுள்ள தவறான கருத்துக்கள் நான் எழுதியது அல்ல என்று தப்பித்துக் கொள்ளும் தந்திரத்துடனேயே ஹதீஸ் நிராகரிப்பாளர் மவுனமாக இருப்பதாகத் தெரிகிறது.

ஸாலிம்(ரலி) அவர்கள் பாலருந்தியது தொடர்பான ஹதீஸுக்கு நாம் அளித்திருந்த விளக்கத்துக்கு மறுப்பென்ற பெயரில் அத்தகை யவர்களால் எழுதப்பட்டுள்ள தவறான கருத்துக்களுக்கு வரும் தொடரில் பதிலளிப்போம் இன்ஷாஅல்லாஹ்.

# அத்தியாயம் 5

**"தமிழ்நாட்டுத் தவ்ஹீத்"** என்ற பெயரில் புகுத்தப்படும் ஹதீஸ் நிராகரிப்புக் கொள்கைக்கு இத்தொடரில் மறுப்பைப் பதிவு செய்து வருகிறோம். ஹதீஸ் நிராகரிப்பாளர் தனது திருகுர்ஆன் தமிழாக்கத்தில், சூனியம் தொடர்பான ஹதீஸை தான் நிராகரிப்பதை நியாயப்படுத்து வதற்காக மேலும் நான்கு ஹதீஸ்களை நிராகரித்துள்ளார்.

அந்த ஹதீஸ்கள் நிராகரிக்கத்தக்க தல்ல என்பதற்கான விளக்கத்தை கடந்த நான்கு தொடர்களில் பார்த்து வந்தோம்.

இந்நான்கு தொடர்களில் முதலாவதாக ஸாலிம்(ரலி) அவர்களுக்கு பால்கொடுக்கப்பட்டது தொடர்பான ஹதீஸுக்கு விளக்கமளித்திருந் தோம். அதற்கு மறுப்பளிக்கிறோம் என்று சொல்லிக்கொண்டு ஏகத்துவ பெயரில் வெளியாகும் ஒரு பத்திரிக்கையில் (ஜுன் 2013) தவறுகளை அள்ளிக் கொட்டியிருக்கிறார்கள்.

இத்தொடரில் மீதமுள்ள ஹதீஸ்களுக்கு விளக்கமளித்த பின் அவர்களுக்கு விரிவாக விளக்கமளிக்க வேண்டுமென்பதற்காக கடந்த ஆகஸ்ட் 2013 அல்ஜன்னத் இதழில் அவர்களின் ஹதீஸ் விளக்கத் துக்கு அப்பாற்பட்ட சில தவறுகளை மட்டும் சுட்டிக் காட்டியிருந்தோம்.

இப்போது ஹதீஸ் நிராகரிப்பாளரின் நிராகரிப்புச் செயலை நியாயப்படுத்தி அந்த இதழில் எழுதப்பட்டுள்ளவற்றையும் குர்ஆன் ஹதீஸ் அடிப்படையில் அவற்றுக்கான மறுப்பையும் காண்போம்.

பால்குடிச் "சட்டம் ஜாக்கின் பித்தலாட்டம்" என்று தலைப்பி லிருந்தே அயோக்கியத்தனம் ஆரம்பமாகிறது. கட்டுரைக்குள் தவறுகள் மலிந்து கிடக்கின்றன. ஹதீஸ் நிராகரிப்பாளர் பிறரை வைத்து இவ்வாறு எழுத வைத்திருப்பது ஒரு தந்திரமாகும். இதிலுள்ள தவறு களெல்லாம் வெளிப்படுத்தப்படும் போது அதை நான் எழுதவில்லை பிறர் எழுதிய தவறுகள் என்று தப்பித்துக் கொள்வதற்காகவே இவ்வாறு செய்கிறார். மனிதர்களிடம் தப்பித்துக் கொள்ளலாம் அல்லாஹ்விடம் தப்பிக்க முடியாது என்பதை இந்த ஹதீஸ் நிராகரிப்பாளருக்கு எச்சரிக்கையாகச் சொல்லிக் கொள்கிறோம்.



நாம் ஆதாரப்பூர்வமான ஹதீஸை நிராகரிப்பது தவறு என்பதை சுட்டிக்காட்டி நல்வழியில் அழைக்கிறோம். ஆனால் அவர்கள் கட்டுரையில் ஜம்யிய்யத்து அஹ்லில் குர்ஆன் வல் ஹதீஸைப் பற்றி தங்களுக்கே உரிய மட்டமான வழிமுறையில் கீழான வார்த்தைகளால் விமர்சித்துள்ளார்கள். அவற்றின் மூலமே மக்கள் அவர்களின் தவறான போக்கை அறிந்து கொள்ளலாம். அவற்றுக்கு பதில் சொல்வதை நாம் தவிர்த்து விட்டு ஹதீஸ் தொடர்பாக அவர்கள் எழுதியுள்ள தவறான விஷயங்களுக்கு மட்டும் பதிலளிக்கிறோம்.

ஹதீஸ் நிராகரிப்பாளர் ஸாலிம்(ரலி) அவர்களின் பால்குடி தொடர்பான ஹதீஸை மறுப்பதற்கு வைத்த வாதங்களெல்லம், தவ்ஹீத் வாதிகள் தரப்பிலிருந்து தெளிவான குர்ஆன், ஹதீஸ் ஆதாரத்துடன் வைக்கப்பட்ட கருத்துக்கள் மூலம் நிர்மூலமாகின. ஆனாலும் மார்க்கப் பேணுதலும் மனசாட்சியும் இல்லாத இவர் அதே வழிகேட்டு வாதங்களை மீண்டும் மீண்டும் தனது குர்ஆன் தர்ஜமாவில் பதிய வைத்து ஃபித்னாவை தொடர்ந்து கொண்டிருப்பதால் பல புதிய வலுவான ஆதாரங்களுடனும் தகவல்களுடனும் விளக்கம் எழுதி யிருக்கிறோம்.

இந்த ஹதீஸ் தொடர்பாக அவரது தர்ஜமாவில் எழுதப்பட்டி ருப்பவை மற்றும் அதற்கு ஆதரவாகவும் எதிராகவும் எழுதப்பட்டி ருப்பவை ஆகியவற்றை படித்தவர்கள் நமது விளக்கத்தையும் (அல்ஜன்னத் மே 2013 இதழில்) படிக்கும் போது இந்த உண்மையை தெரிந்து கொள்ளலாம்.

ஆனால் நாம் வைத்திருக்கும் வாதங்களுக்கெல்லாம் எப்போதோ இவர்கள் பதில் சொல்லிவிட்டதாகவும் நாம் பழைய வாதங்களைத்தான் வைத்திருப்பதாகவும் விட்டடித்திருகிறார்கள்.

நாங்கள் எல்லாவற்றுக்கும் பதில் சொல்லிவிட்டோம் என்று எழுதி தங்கள் இயக்கத்திலுள்ள மக்களை ஏமாற்றிக் கொண்டிருக்கி றார்கள். இவர்கள் கொடிய பொய்யர்கள் என்பதற்கு இவர்களின் எழுத்திலிருந்தே நம்மால் ஆதாரம் காட்ட முடியும்.

சூனியம் தொடர்பாக அல்ஜன்னத்தில் எழுதப்பட்டவற்றுக்கு வரிக்கு வரி(?) பதில் எழுதியதாக எழுதிவிட்டு இவ்வாறு எழுதுகிறார்கள்:

மார்க்கம் சொல்லும் தகுதி கடுகளவாவது இவர்களுக்கு இருந்திருந்தால் நமது மறுப்புக் கட்டுரைக்குரிய பதிலை இவர்கள் வெளியிட்டிருக்க வேண்டும். ஆனால் எந்தப் பதிலையும் இதுவரை இவர்கள் கூறவில்லை.

பதில் சொல்லும் திராணி இவர்களுக்கு இல்லை எனும் போது இவர்கள் நமக்கு மறுப்பு எழுதினால் இவர்களை அரைவேக்காடுகள் என்று தான் சொல்ல முடியும். இந்த லட்சணத்தில் சாலிம் தொடர்பாக பழைய பித்னாவை மறுபடியும் பரப்ப ஆரம்பித்து விட்டது அல் ஜன்னத் மாத இதழ்.

இவ்வாறு அந்த இதழில் எழுதி வைத்திருக்கிறார்கள்.

இவர்கள் மார்க்கத்தின் பெயரால் பொய்களையும் புரட்டுக் களையும் எழுதி மக்களை ஏமாற்றும் அயோக்கியர்கள் என்பதற்கு இது தெளிவான ஆதாரம்.

ஏனென்றால் சூனியம் தொடர்பான தொடர் கட்டுரை நமது அல்ஜன்னத்தில் மே 2012 முதல் மார்ச் 2013 வரை ஒன்பது இதழ்களில் வெளிவந்தது. அதில் 8.9 (பிப்ரவரி மார்ச் 2013) ஆகிய இரு இதழ்களில் அவர்கள், நமக்கு பதிலென்று சொல்லிக் கொண்டு எழுதியவற்றுக்கு முறையான மறுப்பையும் சரியான விளக்கத்தையும் கொடுத்திருந் தோம். அவர்கள் பதில் எழுதியது நமது முதல் தொடருக்கு மட்டுமே என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும்!

அப்படியிருந்தும் இவர்கள் இத்தனைத் துணிச்சலாக பொய் சொல்வதற்குக் காரணம் இவர்களின் இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் மற்றவர்களின் பத்திரிக்கைகளை படிப்பதில்லை என்ற நம்பிக்கை யினால் தான்.

ஆனாலும் நமது எழுத்துக்களைப் படிக்கும் இவர்களின் இயக்கத்தைச் சேர்ந்த சிலர் இவர்களின் வழிகேட்டைப் புரிந்துக் கொண்டு தங்களின் தவறான கருத்துக்களை மாற்றிக் கொண்டதாக தெரிவித்துள்ளனர். இப்படி வழிகேட்டிலிருந்து மீளுபவர்களின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டுதான் இருக்கிறது. அல்ஹம்து லில்லாஹ்.



அத்துடன் இவர்கள் துணிச்சலாக பொய் சொல்பவர்கள் என்பதையும் இவர்களின் இயக்கத்தைச் சேர்ந்த சிலர் பகிரங்கமாக ஒப்புக் கொள்கிறார்கள். ஆக இவர்கள் துணிச்சலாக பொய்களை எழுதுவது, இவர்களைச் சேர்ந்தவர்களே இவர்களின் அயோக்கி யத்தனத்தை அறிந்து கொள்வதற்கு நல்வாய்ப்பாக அமைகிறது. எல்லாப்புகழும் அல்லாஹ்வுக்கே!

இவர்களின் தவறான வாதங்களுக்கு நாம் முறையான விளக்கங்களை முன்வைத்த பின்பும் பதிலளிக்க இயலாமலும் உண்மையை ஏற்கும் மனமில்லாமலும் நம்மைப் பற்றி விமர்சித்துள்ள மார்க்கம் சொல்லும் தகுதியின்மை, திராணியின்மை, அரைவேக் காட்டுத் தனம் உள்ளிட்ட விமர்சனங்களெல்லாம் இவர்களுக்கே பொருத்தமானவையாகின்றன!

### தெளிவான பித்தலாட்டம்

ஸாலிம்(ரலி) அவர்களின் பால்குடித் தொடர்பான ஹதீஸை மறுக்க வேண்டுமென்பதற்காக ஹதீஸ் நிராகரிப்பாளர் தனது தர்ஜ மாவின் விளக்கப்பகுதியில் ஹதீஸில் செய்துள்ள பித்தலாட்டத்தை வெளிப்படுத்தியிருந்தோம். இதனை மறுப்பதற்காக, ஹதீஸ் நிராகரிப்பாளரின் அடிவருடி வைத்துள்ள சமாளிப்பு வார்த்தைகள் நிச்சயமாக அது பித்தலாட்டம் தான் என்பதைத் தெளிவுபடுத்துகின்றன.

முதலில் ஹதீஸ் நிராகரிப்பாளரின் பித்தலாட்டத்தை மீண்டும் பார்ப்போம்.

**“ஸாலிம் எனும் இளைஞர் அபூஹுதைபா(ரலி) வீட்டுக்குள் வந்து போய்க் கொண்டிருந்தார். தமது மனைவியுடன் ஸாலிம் வந்து பேசிக் கொண்டிருப்பது அபூஹுதைபாவிற்குச் சங்கடத்தை ஏற்படுத்தியது...”**

**(பார்க்க: ஹதீஸ் நிராகரிப்பாளரின் திருக்குர்ஆன் தமிழாக்கம் பக்கம்: 1309 பதிப்பு: 7)**

இதே ஹதீஸ் அடுத்த பதிப்பில்:

**“அபூஹுதைபா(ரலி) அவர்களின் மனைவியால் வளர்க்கப் பட்ட ஸாலிம் எனும் இளைஞர் அபூஹுதைபாவின் வீட்டுக்குள் வந்து போய்க் கொண்டிருந்தார். தமது மனைவியுடன் ஸாலிம்**

**வந்து பேசிக் கொண்டிருப்பது அபூஹுதைபாவிற்குச் சங்கடத்தை ஏற்படுத்தியது..."**

**(ஹதீஸ் நிராகரிப்பாளரின் திருக்குர்ஆன் தமிழாக்கம் பக்கம்: 1446, பதிப்பு: 8)**

**இந்த இரண்டு பதிப்பிலும் உள்ள வித்தியாசத்தை கவனிக் கிறீர்கள். முந்தைய பதிப்புக்களில் ஹதீஸை படிக்கும் போதே வாசகர்கள் அதை அருவருப்பாகக் கருத வேண்டும் என்பதற்காக ஸாலிம் என்ற இளைஞர் அபூஹுதைபா(ரலி) அவர்களின் மனைவியுடன் பழக்கம் பிடித்து வந்து பேசிக் கொண்டிருந்து விட்டுச் செல்வதாக சித்தரித்துள்ளார். இது ஹதீஸில் செய்யும் பித்தலாட்டம்.**

இந்த பித்தலாட்டத்தை இந்த ஹதீஸ் நிராகரிப்பாளரின் மாணவர் முஜீபுர் ரஹ்மான் உமரி தனது உரை ஒன்றில் வெளிப்படுத்தியிருந்தார். ஆனால் அது பெரிய அளவில் செய்தியாக வில்லை. பின்பு முஜீபுர் ரஹ்மான் உமரீக்கும் இந்த ஹதீஸ் நிராகரிப்பாளருக்கும் இராமனாத புரம் மாவட்டம் தொண்டியில் வைத்து ஒரு விவாதம் நடந்தது. அதில் தனது மாணவரின் பேச்சுக்களை வைத்து அவரையே விமர்சிக்க வேண்டும் என்பதற்காக அவரது பேச்சுக்களில் பல கிளிப்புக்களை தயார் செய்து வந்து விவாதத்தில் அவ்வப்போது போட்டுக்காட்டி தனது பாணியில் விமர்சித்திக் கொண்டிருந்தார் ஹதீஸ் நிராகரிப்பாளர்.

அப்போது ஹதீஸ் நிராகரிப்பாளர் தரப்பில் அவரது மாணவர் மீது ஒரு குறையை கூறி அதற்கு ஆதாரமாக ஒரு கிளிப்பை போட்டுக் காட்ட முனைந்தார்கள். அப்போது தவறுதலாக அந்த குற்றச் சாட்டுக்கு தொடர்பில்லாத வேறொரு கிளிப்பை போட்டு விட்டார்கள்.

அதில் அந்த மாணவர், ஸாலிம்(ரலி) அவர்கள் தொடர்பான இந்த ஸதீஸில் இவ்வாறு பித்தலாட்டம் செய்திருப்பதன் மூலம், கண்ணிய மிக்க ஸஹாபிய பெண்ணின் குடும்பத்தை ஹதீஸ் நிராகரிப்பாளர் கொச்சைப் படுத்திவிட்டார்" என்று குற்றம் சாட்டிப் பேசுகிறார்.

ஹதீஸ் நிராகரிப்பாளர் தரப்பு தவறுதலாக கிளிப்பை மாற்றிப் போட்டதால் அவர்களுக்கு பாதகமான விஷயம் விவாதத்தில் அவர்களின் கைகளாலேயே வெளிப்பட்டது.



இது நடந்தது 2009ம் வருடம் மார்ச் மாதத்தில். அப்போது, ஹதீஸ் நிராகரிப்பாளரின் தர்ஜமாவின் 7வது பதிப்பே இறுதிப் பதிப்பாக இருந்து கொண்டிருந்தது. அதன் பிறகு ஆகஸ்ட் 2009ல் வெளியிட்ட 8வது பதிப்பில் மேற்கண்டவாறு திருத்தம் செய்துள்ளார் என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும். உண்மையில் இந்தத் திருத்தமும் குறைபாடு கொண்டது தான். ஸாலிம்(ரலி) அவர்கள் அபூஹுதைபா(ரலி) அவர்களுக்குத் தான் வளர்ப்பு மகன். இந்தத் தகவல் இவரே எடுத்தெழுதியுள்ள ஹதீஸ்களில் (முஸ்லிமில்) உள்ளது. அபூஹுதை பா(ரலி) அவர்கள் வளர்ப்பு மகனாக வைத்திருந்த ஸாலிம்(ரலி) அவர்களைத் தாமும் மகனாகக் கருதி வந்ததாக அபூஹுதைபா (ரலி) அவர்களின் மனைவி ஸஹ்லா(ரலி) அவர்கள் கூறும் தகவல் புகாரி (5088) அபூதாவூத் (2061) ஆகிய நூல்களில் இடம் பெறுகிறது.

ஸாலிம்(ரலி) அவர்கள் அசலில் அபூஹுதைபா(ரலி) அவர்களின் வளர்ப்பு மகனாக இருந்தும் அதை குறிப்பிடாமல் மனைவியை மட்டும் பிரதானப்படுத்தியிருப்பது இந்த ஹதீஸை முறையாகப் புரிவதில் இடையூறு ஏற்படுத்தும் என்பதை கவனிக்க வேண்டும்.

ஹதீஸ் நிராகரிப்பாளரின் தர்ஜமாவிலிருந்து நாம் எடுத்தெழு தியிருப்பதைப் படிக்கும் எவரும் அவரது பித்தலாட்டத்தை தெளி வாகத் தெரிந்து கொள்ளலாம். இதனால் தான் இந்த பித்தலாட்டத்தை செப்டம்பர் 2012 அல்ஜன்னத் இதழில் வெளியிட்ட போது ஹதீஸ் நிராகரிப்பாளர் அதற்கு மறுப்பு எழுதாமல் இருந்து விட்டார்.

ஆனால் எட்டு மாதங்கள் கழித்து மே 2013 இதழில் மீண்டும் அதை நாம் வெளியிட்டதும் அவரது அடிவருடியால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. தனது தலைவரைக் காப்பாற்றுவதற்காக சமாளிப்பு வாதத்தை வைத்திருக்கிறார். அவரைக் காப்பாற்றுவதற்கு பதிலாக மீண்டும் கூடுதலாக மாட்டிவிடும் விதத்தில் தான் அமைந்துள்ளது.

இதோ அந்த சமாளிப்பைப் படியுகள்:

"மேற்கண்ட செய்தியின் படி என்னமோ சாலிம்(ரலி) சஹ்லா(ரலி) அவர்களால் பெற்றெடுக்கப்பட்ட மகனாக இருந்தது போலவும் அந்தத் தகவலைச் சொல்லாமல் சாலிம் எனும் இளைஞன் என மொட்டை யாகக் கூறியதை போலவும் கூச்சலிடுகின்றனர். சஹ்லா(ரலி) அவர்

களால் சாலிம் வளர்க்கப்பட்டிருந்தார் என்ற தகவலைச் சொன்னால் மட்டும் சஹ்லா(ரலி) அவர்களுக்கு சாலிம் மகனாகி விடுவாரா? அவர் சஹ்லா(ரலி) அவர்களின் வீட்டுக்குச் சென்று வருவது சரியானதாகி விடுமா?''

இவ்வாறு எழுதி சமாளித்திருக்கிறார்கள். நாம் வெளிப்படுத்தியிருக்கும் அவரது தெளிவானக் குற்றத்தை மறைப்பதற்காக சம்பந்தமில்லாத கேள்வியைக் கேட்டிருக்கிறார்கள்.

ஸாலிம்(ரலி) அவர்கள் ஸஹ்லா(ரலி)அவர்கள் பெற்ற மகனாயிருந்திருந்தாலோ அல்லது வளர்ப்பு மகன் என்று சொல்லிவிடுவதாலேயே பெற்ற மகனின் நிலையை அடைய முடியும் என்றிருந்தாலோ இப்படி ஒரு ஹதீஸே இருந்திருக்காது. அத்துடன் ஹதீஸ் நிராகரிப்பாளரின் கயமைத் தனமும் வெளிப்பட்டிருக்காது.

**நாம் வெளிப்படுத்திக் காட்டிய குற்றம் என்ன? தான் அழிச்சாட்டியத்துடன் நிராகரிக்கும் ஹதீஸை அருவருப்பாகக் காட்டுவதற்காகவும் படிக்கும் போதே வாசகர் அந்த ஹதீஸைக் குறித்து சந்தேகப்பட வேண்டுமென்பதற்காகவும் ஹதீஸில் திரிப்பு வேலை செய்துள்ளார் என்பதுதான்.**

இந்த ஹதீஸ் நிராகரிப்பாளர் இந்த ஹதீஸை எழுதியிருப்பதையும் ஹதிஸில் உண்மையாக உள்ளதையும் படித்துப் பார்த்தால் இவரது மோசடியை எவரும் அறிந்து கொள்ள முடியும்.

ஹதீஸ் நிராகரிப்பாளர் எழுதியது:

**“ஸாலிம் என்ற இளைஞர் அபூஹுதைபா(ரலி) வீட்டுக்குள் வந்து போய்க்கொண்டிருந்தார். தமது மனைவியுடன் ஸாலிம் வந்து பேசிக் கொண்டிருப்பது அபூஹுதைபாவிற்குச் சங்கடத்தை ஏற்படுத்தியது. இது பற்றி அபூஹுதைபாவின் மனைவி நபிகள் நாயகம்(ஸல்) அவர்களிடம் கூறிய போது...''**

ஹதீஸில் இருப்பது:

**அபூஹுதைபாவின் அடிமை(யும் வளர்ப்பு மகனுமான) சாலிம்(ரலி) அவர்கள் அபூஹுதைஃபா மற்றும் அவருடைய மனைவியுடன் அவர்களது வீட்டில் இருந்து வந்தார். அப்போது அபூஹுதைஃபாவின் மனைவி சஹ்லா) பின்த் சுஹைல்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் வந்து...'' நூல்: முஸ்லிம் 2879**

இப்போது மீண்டும் ஒரு முறை ஹதீஸ் நிராகரிப்பாளர் இந்த ஹதீஸை எழுதியிருக்கும் விதத்தையும் உண்மையாக ஹதீஸில் இருப்பதையும் படித்துப் பாருங்கள்.

**இவர் எழுதியிருப்பது படி, அபூஹுதைஃபா(ரலி) அவர்களுக்குச் சம்பந்தமில்லாத யாரோ ஸாலிம் என்ற ஓர் இளைஞர் அவர்களின் மனைவியுடன் பழக்கம் பிடித்து, வந்து பேசிக் கொண்டிருந்து விட்டுச் செல்கிறார். இதைப் படிக்கும் போதே அருவருப்பாகத் தோன்றுகிறது.**

**ஆனால் உண்மையாக ஹதீஸில் உள்ள படி, ஸாலிம்(ரலி) அவர்கள் அபூஹுதைஃபா(ரலி) அவர்களின் அடிமை, வளர்ப்பு மகன். அபூஹுதைஃபா(ரலி) அவர்களின் வீட்டில் இருந்து வளர்ந்து வருபவர்.**

இதைக் கவனிக்கும் போது இவரது ஹதீஸில் திரிக்கும் கயமைத் தனம் தெளிவாகத் தெரியும். ஆனாலும் இந்தக் கயமைத் தனத்தை மறைக்க முயலும் இந்த அடிவருடி மேற்கண்ட சமாளிப்புவாதத்துடன் அரபி மூலத்திலும் ஒரு ஹதீஸில் ஹதீஸ் நிராகரிப்பாளர் எழுதியுள்ளபடி. உள்ளது என்று ஒரு ஹதீஸின் அரபி மூலத்தை எடுத்து எழுதியுள்ளார்.

அது ஸஹீஹ் முஸ்லிம் ஹதீஸ் எண்: 2881 ஆகும் அதன் வாசகம் வருமாறு:

''ஸைனப் பின்த் உம்மி சலமா(ரலி) அவர்கள் கூறியதாவது: உம்முசலமா(ரலி) அவர்கள் ஆயிஷா(ரலி) அவர்களிடம் விரைவில் பருவ வயதை அடையவிருக்கும் அந்தச் சிறுவன் உங்களுடைய வீட்டிற்குள் வருகிறானே! ஆனால் அவன் என் வீட்டிற்குள் வருவதை நான் விரும்ப மாட்டேன் என்று கூறினார். அதற்கு ஆயிஷா(ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்களிடம் (இதற்கான) முன்மாதிரி உங்களுக்குக் கிடைக்க வில்லையா? என்று கேட்டுவிட்டுப் பின் வருமாறு கூறினார்கள்:

அபூஹுதைஃபாவின் மனைவி நபி(ஸல்) அவர்களிடம் வந்து, அல்லாஹ்வின் தூதரே! சாலிம் என் வீட்டிற்குள் வருகிறார்; அவர் பருவ வயதையடைந்த மனிதர், இதனால் (அவர் என்னைத் திரையின்றி பார்க்க நேரிடும் என்பதால் என் கணவர்) அபூஹுதைஃபாவின் மனத்தில் அதிருப்தி நிலவுகிறது என்று கூறினார்கள்...

இந்த ஹதீஸில் சாலிம்(ரலி) அவர்கள் பற்றிக் கூறப்பட்டிருப்பதை, ஹதீஸ் நிராகரிப்பாளர் திரித்து எழுதியதற்கு ஆதாரமாகக் காட்ட முனைகின்றார்கள்.

இது தவறாகும். ஏனென்றால் இவர் பயன்படுத்தியுள்ள கொச்சையாகக் காட்டும் வாசகம் இதில் இல்லை. அத்துடன் இந்த ஹதீஸில் ஸாலிம்(ரலி) அவர்களுக்கும் அபூஹுதைஃபா(ரலி) அவர்களுக்கும் உள்ள உறவு என்ன என்பது கூறப்படாமல் உள்ளது. ஏன் அவர்களின் வீட்டிற்குள் வருகிறார் என்பதும் சொல்லப்படவில்லை.

இதற்கு முந்திய (முஸ்லிம் 2879, 2880) இரண்டு ஹதீஸ்களிலும் ஸாலிம்(ரலி) அவர்கள் அபூஹுதைஃபா(ரலி) அவர்களின் அடிமையும் வளர்ப்பு மகனும் என்ற செய்தியும் அவர்களின் வீட்டில் இருந்து கொண்டிருந்தார் என்ற செய்தியும் தெளிவாக சொல்லப்பட்டுள்ளது.

ஒரே தகவலைக் கெண்ட வரிசையாக வரும் மூன்று ஹதீஸ்களில் சுருக்கமாகச் சொல்லப்பட்டுள்ள ஒரு ஹதீஸை மட்டும் வைத்துக் கொண்டு கொச்சைப்படுத்துவது முறையில்லாத செயலாகும். அத்துடன் இன்னொன்றையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

2881வது ஹதீஸில் உம்மு சலமா(ரலி) அவர்களுடன் நடந்த உரையாடலில் வேறு ஒரு பிரச்சனை தொடர்பாக பேசுவதால் தான் ஸாலிம் (ரலி) அவர்களைப் பற்றி அந்த ஹதீஸில் சுருக்கமாகச் சொல்கிறார்கள்.

ஆனால் ஸாலிம்(ரலி) அவர்களின் பால்குடித் தொடர்பாக மட்டுமே ஹதீஸை அறிவிக்கும் போது ஸாலிம்(ரலி) அவர்களைப் பற்றிய விவரத்தை கூறிவிடுகிறார்கள். இதை ஹதீஸ் எண். 2879,2880 ஆகியவற்றில் காணலாம்.

ஆக இந்த ஹதீஸ் நிராகரிப்பாளர் செய்தள்ளது மிகத் தெளிவான பித்தலாட்டம் என்பது நிரூபணமாகி விட்டது.



# அத்தியாயம் -6

ஹதீஸ் நிராகரிப்பாளரின் வழிகேடு குறித்து எச்சரிப்பதற்காக நாம் எழுதிவரும் இந்தத் தொடர் மூலம் நாமே எதிர்பார்க்காத அளவிற்கு மக்களிடம் விழிப்புணர்வு ஏற்பட்டு வருகின்றது. அல்ஹம்துலில்லாஹ்.

ஹதீஸ் நிராகரிப்பாளரின் நிராகரிப்புக் கருத்துக்களின் தாக்கத்துக்கு ஆளாகியிருந்த பலர் தங்களின் தவறை திருத்திக் கொள்வதாக கூறுவது மனதிற்கு நிறைவைத்தருகிறது. எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே!

ஸாலிம்(ரலி) அவர்களின் பால்குடி பற்றிய ஹதீஸ் நிராகரிக்கத் தக்கதல்ல என்பதற்கு நாம் கொடுத்திருந்த விளக்கங்களுக்கு மறுப்பென்று சொல்லிக் கொண்டு ஹதீஸ் நிராகரிப்பாளர் ஆலோசகராக உள்ள ஏகத்துவக் கொள்கை பெயர்தாங்கும் பத்திரிக்கையில் (ஜுன்2013) பக்கங்களை நிரப்பி வைத்திருந்தார்கள். அதன் ஒரு பகுதிக்கான விளக்கத்தை கடந்த இதழில் நாம் பார்த்தோம். மீதியுள்ளவற்றுக்கான விளக்கங்களை இப்போது பார்ப்போம்.

சஹ்லா(ரலி) அவர்களிடம், ஸாலிம்(ரலி) அவர்வளுக்குப் பால்கொடு என்று இந்த ஹதீஸில் சொல்லப்பட்டுள்ளதை பால் எடுத்துக் கொடுக்கப்பட்டது என்று தான் புரிய வேண்டும் என்கிறோம்.

இதை மறுக்க வந்த ஹதீஸ் நிராகரிப்பாளர் தரப்பு, “இந்த ஹதீஸில் ‘அர்ளியீஹி’ என்ற வாசகம் இடம்பெற்றுள்ளது. இது குழந்தைக்கு நேரடியாக பால் கொடுப்பதைக் குறிப்பிடும் வாசகம். அதனால் பால் எடுத்துக் கொடுத்ததாக கருத்து வைக்க முடியாது” என்று வாதித்திருக்கிறது.

**பொதுவாக குழந்தைப் பருவத்தில் பாலூட்டுவது மூலமாகத் தான் தாய், பிள்ளை உறவு ஏற்படும். அதற்கு பயன்படுத்தும் வாசகம் ‘அர்ளியீ’ என்பதாகும். இந்த நிகழ்ச்சியில், அந்த பொதுவான நிலையிலிருந்து விதிவிலக்காக ஒரே ஒருவருக்கு மட்டும் சிறப்பு உத்தரவு போடப்படுகிறது. அதனால் இந்த உறவு ஏற்படுவதற்காக ஏற்கனவே உள்ளவார்த்தை தான் பயன்படுத்தப்படும்.**

**புது வார்த்தை உருவாக்கப்படாது. இதைப் புரிந்து கொண்டால் இவர்களின் இந்த வாதம் அர்த்தமற்றது என்பதை தெரிந்து கொள்ள லாம்.**

அத்துடன் இவர்கள் விதண்டாவாதம் செய்யும் வீணர்கள் என்பதற்கு இது விஷயத்தில் இவர்கள் எழுதிவைத்துள்ளதே தெளிவான ஆதாரமாக உள்ளது.

விபச்சாரத்தின் மூலம் குழந்தை பெற்றெடுத்த காமிதிய்யா குலத்தைச் சேர்ந்த பெண்ணை நோக்கி, "இக்குழந்தைக்குப் பால் குடியை மறக்கடிக்கும் வரை பால் புகட்டிவிட்டு (பின்பு) வா" என்று நபி(ஸல்) அவர்கள் கூறிய ஹதீஸை எழுதிவிட்டு கீழ்வருமாறு எழுது கிறார்கள்.

"ஸாலிமுடைய ஹதீஸில் இடம் பெற்ற 'அர்ளியீஹி' என்ற அதே வாசகம் இங்கேயும் வந்துள்ளது. இந்த இடத்தில், 'குழந்தைக்கு இரண்டு வருடம் கறந்து பால் கொடுத்து விட்டு வா' என்று இவர்கள் அர்த்தம் செய்வார்களா?"

இவர்களின் இந்தக் கேள்வியின் மூலம் 'அர்ளியீஹி' என்ற வார்த்தைக்கு "பால் கறந்து குடிக்கக் கொடு என்பது தான் அர்த்தம்" என்று முஸ்லிம்கள் தரப்பில் கூறுவதாக சித்தரிக்கிறார்கள். நாம் ஒருபோதும் அப்படிக் கூறவில்லை.

பெரியவருக்கு "பால்கொடு" என்று கூறப்படும் உத்தரவை பொது வாக நடைமுயையில் இருப்பது போல் செயல்படுத்தினால் மார்க்கத்தின் வேறு வழிகாட்டலுக்கு முரண்படுகிறது. இந்நிலையில் அவ்வாறு முரண்படாத விதத்தில் பால் எடுத்துக் கொடுக்கப்பட்டதன் மூலம் இந்த உத்தரவு நடைமுறைப்படுத்தப்பட்டது என்பது தான் யதார்த்தம். அதனால் தான் இந்த ஹதீஸை மறுக்காமல் முஸ்லிம்கள் ஏற்று வருகிறார்கள்.

அடுத்து, ஸாலிம்(ரலி) அவர்களுக்கு பால் கொடுக்கும் படி நபியவர்கள் கூறிய போது, அவர் பெரிய ஆணாயிற்றே? அவருக்கு எவ்வாறு நான் பாலூட்டுவேன் என சஹ்லா(ரலி) அவர்கள் கேட்டதை (முஸ்லிம் 2878) குறிப்பிட்டு விட்டு, "நபி(ஸல்) அவர்கள் கறந்து



கொடுக்கச் சொல்லியிருந்தால் சஹ்லா(ரலி) அவர்கள், பெரிய மனிதராக உள்ளாரே தாடியுள்ளவராக இருக்கிறாரே? நான் எப்டிப் பால் புகட்டுவேன்? என்று ஏன் கேள்வி கேட்க வேண்டும்?" எனக் கேட்டியிருக்கிறார்கள்.

இந்த ஹதீஸில்... எவ்வாறு நான் பால் கொடுப்பேன் என்று சஹ்லா(ரலி) அவர்கள் கேட்பதை எந்த விதத்தில் பால் கொடுப்பது என்று விவரம் கேட்பதாக எடுத்துக் கொள்வதை விட பெரியவருக்கு பால் கொடுத்தாலும் பிள்ளையாக ஆக முடியாதே? என்று கேட்பதாக எடுத்துக் கொள்வது தான் மிகப் பொருத்தமானது.

ஏனென்றால் 'எவ்வாறு' என்று மொழிபெயர்க்கப்பட்டுள்ள வாசகத்தின் அரபி மூலம் 'கைஃப' என்பதாகும். இந்த பதம் ஆக முடியாது. ஆகக் கூடாது என்ற கருத்தை வெளிப்படுத்தவும் பயன் படுத்தப்படுகின்றது.

இதற்கு ஆதாரமாக குர்ஆனிலேயே சில வசனங்கள் உள்ளன.

**அல்லாஹ் கூறுகிறான்: அல்லாஹ்வின் வசனங்கள் உங்க ளுக்கு ஓதிக்காட்டப்படும் நிலையிலும் அவனுடைய தூதர் உங்களுக்கு மத்தியில் இருக்கும் நிலையிலும் நீங்கள் எவ்வாறு நிராகரிப்பீர்கள்? அல்குர்ஆன் 3:101**

இங்கு அல்லாஹ், எவ்வாறு (கைஃப) நிராகரிப்பீர்கள் என்று கேட்பதற்கு எந்த விதத்தில் நிராகரிப்பீர்கள் (அல்லாஹ்வை மறுத்தா? தூதரை மறுத்தா? வேதத்தை மறுத்தா?) என்று விவரம் கேட்பதாக கருத்துக் கொள்ள முடியாது. மாறாக, நீங்கள் நிராகரிப்பவர்களாக இருக்கக் கூடாது. நிராகரிப்பவர்களாக இருக்க முடியாது என்று தான் கருத்துக் கொள்ள வேண்டும்.

**இன்னொரு வசனம்: அதனை நீங்கள் எப்படி எடுத்துக் கொள்வீர்கள்? உங்களிடமிருந்து அவர்கள் உறுதியான வாக்குறுதி பெற்று, உங்களில் ஒருவர் மற்றவருடன் கலந்து விட்டீர்களே! அல்குர்ஆன் 4:21**

இந்த வசனத்திலும் அல்லாஹ் 'எப்படி (கைஃப) எடுத்துக் கொள் வீர்கள்? என்று கேட்பதற்கு, எந்த விதத்தில் (பணமாகவா? பொரு

ளாகவா?) என்று அர்த்தம் கொள்ளக் கூடாது. மாறாக நீங்கள் எடுத்துக் கொள்வது கூடாது என்று தான் அர்த்தம் கொள்ள வேண்டும்.

இவ்வாறு திருக்குர்ஆனில் பல வசனங்களைப் பார்க்கலாம்.

**அத்துடன், குழந்தைப் பருவத்தை தாண்டியவர் பால் குடிப்பதால் தாய், பிள்ளை உறவு ஏற்படாது என்பது குர்ஆனிலும் நபிமொழியிலும் சொல்லப்பட்டதாகும். அதற்கு மாற்றமாக நபி யிடமிருந்தே உத்தரவு வரும் போது அது குறித்து ஐயம் ஏற்பட்டே ஆக வேண்டும்.**

**இந்த ரீதியில் பார்த்தாலும், அன்னை சஹ்லா(ரலி) அவர்கள் எழுப்பிய கேள்வி பால் குடித்தாலும் பெரியவர் பிள்ளையாவது எப்படி என்பது குறித்துத் தான் என இலகுவாகப் புரிந்து கொள்ள லாம்.**

ஒரு வேளை இதன் பின்பும் சஹ்லா(ரலி) அவர்கள் கேட்டது பால் கொடுக்கும் விதம் பற்றித்தான் என்று இவர்கள் பிடிவாதம் பிடித்தாலும் அதனால் பாதகமில்லை. ஏனென்றால் சஹ்லா(ரலி) அவர்கள், (இவர்கள் கூறுவது போலவே) பால் கொடுக்கும் முறை குறித்து கேள்வி கேட்டதாக புரிந்து மொழி பெயர்த்தவர்களும் கூட இந்த ஹதீஸை நிராகரிக்கத் தேவையில்லாத விதத்தில் மொழிபெயர்த்து எழுதியுள் ளார்கள். இதோ படியுங்கள்.

...அதற்கு நபி(ஸல்) அவர்கள் நீ அவருக்குப் பால் கொடுத்துவிடு. (அதனால் செவலித்தாய் - மகன் உறவு ஏற்பட்டுவிடும்) என்று கூறினார்கள். சஹ்லா(ரலி) அவர்கள், அவர் (சாலிம்) பருவவயதை அடைந்த மனிதராயிற்றே, அவருக்கு எவ்வாறு நான் பாலூட்டுவேன்? என்று கேட்டார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் புன்னகைத்தவாறு, அவர் பருவ வயதை அடைந்த மனிதர் என்பது எனக்கும் தெரியும் (உன்னிடமிருந்து பாலைக் கறந்து அவரைக் குடிக்கச் செய்வாயாக) என்று கூறினார்கள். நூல்: முஸ்லிம் 2878

இந்த ஹதீஸில் சஹ்லா(ரலி) அவர்களின் கேள்வி, 'பால் கொடுப்பது எவ்விதம் என்பது குறித்துத் தான்' என்று வைத்துக் கொண்டால் அடைப்புக் குறிக்குள் இருக்கும் வாக்கியம் தான்



சரியானது. குர்ஆன், ஹதீஸ் ஆதாரங்கள் அடிப்படையில் நபி(ஸல்) வேறுவிதமாகச் சொல்லியிருக்க வாய்ப்பில்லை.

நபி(ஸல்) அவர்கள் புன்னகைத்தவாறு பதிலளித்தார்கள் என்பதை வைத்து, பால் கொடுப்பது எவ்விதம் என்பது பற்றித் தான் சஹ்லா(ரலி) அவர்கள் கேட்டார்கள் என்று உறுதியாக கூற முடியாது. பெரியவருக்கு பால் கொடுத்தாலும் தாய் - பிள்ளை உறவு ஏற்படாதே என்று நபியின் உத்தரவிலேயே குறுக்குக் கேள்வி எழுப்பியதை வைத்தும் புன்னகைக்கலாம்!

**இப்னு அபீ முலைக்காவின் தயக்கம்:**

அடுத்து, இந்த ஹதீஸ் வெவ்வேறு அறிவிப்பாளர் தொடர்கள் மூலம் அறிவிக்கப்படக் கூடிய வலுவான செய்தியாகும். அவ்வாறான பல அறிவிப்பாளர்கள் தொடர்களில் ஒன்றில் இடம் பெறும் இப்னு அபீ முலைக்கார(ரஹ்) என்ற இளைய தாபிஃ தனக்கு இதனை அறிவித்த காசிம் பின் முஹம்மத்(ரஹ்) என்ற மூத்த தாபிஃயிடமிருந்து இந்த ஹதீஸை செவியுற்றபின், இதனை அறிவிப்பதற்கு அஞ்சி ஒரு வருடகாலம் அறிவிக்காமல் இருந்துள்ளார். அதன் பின் மீண்டும் காசிம் பின் முஹம்மதுவை சந்தித்த போது இந்த ஹதீஸை தான் யாருக்கும் இதுவரை அறிவிக்கவில்லை என்று கூறியபோது, அவர் இந்த ஹதீஸை தாராளமாக பிறருக்கு அறிவியுங்கள். இதை ஆயிஷா(ரலி) அவர்கள் எனக்கு அறிவித்தார்கள் என உறுதிபட கூறினார்.

இந்தத் தகவலை, இந்த ஹதீஸை அறிவித்து விட்டு இப்னு அபீ முலைக்கார(ரஹ்) அவர்களே தெரிவித்துள்ளார்கள். **(பார்க்க: முஸ்லிம் 2880)**

இந்த விஷயத்தை எழுதிவிட்டு இவ்வாறு எழுதுகிறார்கள்.

"இந்த ஹதீஸ் கறந்து கொடுப்பதைப் பற்றி பேசினால் இப்னு அபீ முலைக்கா ஏன் இதை அறிவிப்பதற்குப் பயப்பட வேண்டும்? ஸாலிமுக்கு நேரடியாகப் பால் புகட்டும் படி நபி(ஸல்) அவர்கள் கூறியதாக மக்களுக்கு சொன்னால் மக்கள் தன்னை ஏதாவது செய்து விடுவார்களோ என்ற பயம் தான் இதைச் சொல்ல விடாமல் அவரைத் தடுத்துள்ளது"

**ஹதீஸ் நிராகரிப்புக் கொள்கை இவர்களின் நெஞ்சங்களில் வலுவாக வேரூன்றி விட்டதால் கொஞ்சம் கூட யோசிக்காமல் இது போன்ற கேள்வியை கேட்கிறார்கள். பருவ வயதை அடைந்த பின்பு, பால் குடித்தாலும் கூட தாய் - பிள்ளை உறவு ஏற்படும் என்பது குர்ஆனுக்கும் ஹதீஸ்களுக்கும் மாற்றமான கருத்தாகும். இந்த ஹதீஸில் கூறப்படுவது சாலிம்(ரலி) அவர்களுக்கு மட்டும் குறிப்பானது என்பதை உணராவிட்டால் ஐயம் எழத்தான் செய்யும். அதனால் தான் இப்னு அபீமுலைக்கா இதனை அறிவிக்கத் தயங்கி யுள்ளார்!**

அடுத்து இவர்கள் சொல்லியிருப்பதைக் கவனியுங்கள். "ஸாலிமுக்கு நேரடியாகப் பால் புகட்டும் படி நபி(ஸல்) அவர்கள் கூறியதாக மக்களுக்கு சொன்னால் மக்கள் தன்னை ஏதாவது செய்து விடுவார்களோ என்ற பயம் தான் இதைச் சொல்ல விடாமல் அவரைத் தடுத்துள்ளது"

**காசிம் பின் முஹம்மத்(ரஹ்) அவர்களை இப்னு அபீ முலைக்கா மீண்டும் சந்தித்த பின் இந்த ஹதீஸை ஆயிஷா(ரலி) அவர்கள் அறிவித்ததை உறுதிப்படுத்திக் கொண்டு மக்களுக்கு அறிவித்துள்ளார். யாரும் எதுவும் செய்யவில்லை, மட்டுமின்றி வேறு அறிவிப்பாளர் தொடர்களில் பலரும் அறிவித்துள்ளனர். முஸ்லிம் உள்ளிட்ட ஆதாரப்பூர்வமான பல நூல்களிலும் ஆட்சேபனை செய்யப்படாமல் பதிவு செய்யப்பட்டுள்ளது.**

இதன்படிப் பார்த்தால் இவர்கள் தான் இந்த ஹதீஸை தவறாகச் சித்தரித்துக் கொண்டு விதண்டா வாதங்கள் செய்து கொண்டிருக் கிறார்கள் என்பதை அறியலாம்.

**இந்த ஹதீஸை அறிவிக்கும் தாபிஈ இப்னு அபீ முலைக் காவுக்கு இந்த ஹதீஸ் விஷயத்தில் ஐயம் ஏற்பட்டு ஒரு வருட காலம் இதை அறிவிக்காமல் இருந்து பின்பு மீண்டும் உறுதி படுத்திக் கொண்டு இந்த ஹதீஸை அறிவித்துள்ளார் என்றால் இந்தச் செய்தி உண்மையானதுதான் என்பதற்கு இது தெளிவான ஆதாரமாகும். இதனை நாம் நமது ஆக்கத்தில் முன்பே (மே 2013 இதழில்) தெளிவு படுத்தியுள்ளோம். தங்களுக்கு பாதகமான**



**தகவலையே சாதகமானதாக இவர்கள் காட்ட முனைவது வேடிக்கை!**

**அபூதாவூதில் இடம்பெறுவது:**

சாலிம்(ரலி) அவர்கள் தொடர்பான இந்த ஹதீஸை வேறு அறிவிப்பாளர் தொடர் வழியாக இமாம் அபூதாவூத் அவர்கள் பதிவு செய்துள்ளார்கள். அந்த ஹதீஸுடன் சேர்ந்தவாறே, "பால் எடுத்துக் கொடுக்கப்பட்டது என்பது தான் அறிஞர்களின் கருத்து" என்ற தகவல் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதைப் படிக்கும் போது இமாம் அபூதாவூத் அவர்கள் கூறும் விளக்கம் என்று கருதும் விதத்திலேயே அமைந் துள்ளது. (அபூதாவூத் 2063 அல்மகத்பா அஷ்ஷாமிலா மென்பொருள் 3.28 பதிப்பு)

இதை நாம் எடுத்துதெழுயிருப்பது குறித்து நாம் அவதூறாக எழுதியிருப்பதாக குற்றம் சாட்டியுள்ளார்கள். அப்போது தான், இந்த விளக்கம் அபூதாவூதின் வேறு பதிப்பில் இல்லை என்பது தெரியவந்தது. ஆகையால் இந்த விளக்கம் இமாம் அபூதாவூத் அவர்கள் கூறினார்கள் என்பது சந்தேகத்திற்குரியதாகிறது என்பது உண்மை, ஆனால் நாம் இதை அவதூறாக எழுதவில்லை.

பெரியவருக்கு பால் கொடுப்பது என்பது பால் எடுத்துக் கொடுக்கப்படுவது தான் என்றும் இதுவே அறிஞர்களின் கூற்று என்றும் முஅத்தாவின் விரிவுரையான அத்தம்ஹீதில் இமாம் இப்னு அப்தில் பர்(ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.**(பார்க்க: அத்தம்ஹீத் பா: 8, பக்: 257)**

இப்படித்தான் ஹதீஸைப் புரிய வேண்டும் என்பதை முன்பு விளக்கியுள்ளோம். அறிஞர்களின் கூற்றும் இதை வலுப்படுத்துகிறது.

# அத்தியாயம் – 7

ஹதீஸ் நிராகரிப்பாளர் தனது திருக்குர்ஆன் தமிழாக்கத்தின் விளக்கக் குறிப்புப் பகுதியில் நிராகரித்துள்ள ஹதீஸ்களை நிராகரிக்கக் கூடாது என்பதற்கான விளக்கத்தை இத்தொடரின் நான்கு பகுதிகளில் முழுமையாகப் பார்த்தோம். அல்ஹம்துலில்லாஹ்.

குர்ஆன், ஹதீஸ் ஆதாரத்தின் அடிப்படையில் அமைந்துள்ள இந்த விளக்கத்தை ஏற்று ஹதீஸ் நிராகரிப்பாளர் தனது திருக்குர்ஆன் தமிழாக்கத்தின் விளக்கப்பகுதியில் திருத்தமும் வருத்தமும் வெளியிட்டிருக்க வேண்டும்!

ஆனால் உண்மையையும் நன்மையையும் ஏற்க மனமில்லாத இந்த ஹதீஸ் நிராகரிப்பாளர் தான் ஆலோசகராக இருந்து இயக்கிக் கொண்டிருக்கும் ஏகத்துவ பெயர் தாங்கும் பத்திரிக்கையில் (ஜுன் 2013) ஸாலிம்(ரலி) அவர்களின் பால்குடி தொடர்பான ஹதீஸுக்கு மறுப்பு வெளியிட்டிருந்தார்.

தவறுகள் மலிந்துள்ள அந்த மறுப்பு ஹதீஸ் நிராகரிப்பாளர் பெயரில் வெளிவராமல் வேறொருவர் பெயரில் வெளிவந்துள்ளது. இதுவே இந்த ஹதீஸ் நிராகரிப்பாளரின் பெரியதந்திரம் தான். ஏனென்றால் அதன் தவறுகளெல்லாம் வெளிப்படுத்தப்படும் போது அதை நான் எழுதவில்லை மற்றவர்கள் எழுதியது என்று சொல்லித் தப்பித்துக் கொள்ளலாம்.

இந்த ஹதீஸ் நிராகரிப்பாளருக்கு நாம் சொல்லிக் கொள்வது; இந்த உலகில் இவ்வாறு தப்பித்துக் கொள்ளலாம். ஆனால் மறு உலகில் அல்லாஹ்வின் பிடியிலிருந்து தப்பிக்க முடியாது. அல்லாஹ்வையும் இறை நம்பிக்கையாளர்களையும் ஏமாற்றுவதாக எண்ணிக் கொண்டு உங்களை நீங்களே ஏமாற்றிக் கொள்ள வேண்டாம்!

ஸாலிம்(ரலி) அவர்களின் பால்குடி தொடர்பாக அவர் தரப்பில் வைக்கப்பட்டிருந்த சில தவறான வாதங்களுக்கு கடந்த இரு இதழ்களில் விளக்கமளித்திருந்தோம். மீதமுள்ள ஹதீஸ் நிராகரிப்பு வாதங்களுக்கு முஸ்லிம்கள் தரப்பு விளக்கத்தைப் பார்ப்போம்.



**சிறப்புச் சலுகை:**

ஸாலிம்(ரலி) அவர்களுக்கு பால் கொடுக்கப்பட்டு மஹ்ரம் உறவு ஏற்பட்டது. அவர்ளுக்கு மட்டுமே விதிவிலக்காகச் சொல்லப்பட்டதாகும். இதற்கு சம்பந்தப்பட்ட ஹதீஸிலுள்ள வாசகங்களே ஆதாரமாக இருப்பதை எடுத்தெழுதியிருந்தோம்.

இதை எதிர்க்கும் ஹதீஸ் நிராகரிப்பாளர் தரப்பு, விதிவிலக்கு என்று கூறித் தப்பிக்கலாமா? என்று கேட்டிருக்கிறது. இந்தக் கேள்வி மூலம் ஏதோ இவருக்கு பதில் சொல்வதற்காக இன்று நாம் இந்தக் கருத்தைக் கூறுவது போல் சித்தரிக்கிறது ஹதீஸ் நிராகரிப்பாளர் தரப்பு.

**உண்மையில் இந்த ஹதீஸ், நபி(ஸல்) அவர்கள் அதை கூறிய நாளிலிருந்து முஸ்லிம்களிடம் இருந்து வருகிறது. இதை முஸ்லிம்கள் ஏற்க மறுக்கவில்லை, ஆனால் இதைப் புரிவதில் வேறுபாடு இருந்துள்ளது. இது ஸாலிம்(ரலி) அவர்களுக்கு மட்டும் குறிப்பானது என்று பரவலாகவும், அவசியத்தேவை ஏற்பட்டால் இம்முறையில் தாய் பிள்ளை உறவை ஏற்படுத்திக் கொள்ளலாம் என்று அபூர்வமாக மிகச் சிலரும் கூறுகின்றனர். இதுவும் கூட இந்த ஹதீஸ் உண்மையானது என்பதற்கு கூடுதல் ஆதாரமாகும்.**

இப்போது இந்தச் சலுகை ஸாலிம்(ரலி) அவர்களுக்கு மட்டும் சொல்லப்பட்டது தான் என்பதை விளக்கும் ஹதீஸைப் பார்ப்போம்!

ஆயிஷா(ரலி) அவர்கள் கூறியதாவது, அபூஹுதைஃபாவின் அடிமை (யும் வளர்ப்பு மகனுமான) ஸாலிம்(ரலி) அவர்கள் அபூஹுதைஃபா மற்றும் அவருடைய மனைவியுடன் அவர்களது வீட்டில் இருந்து வந்தார்.

அப்போது (அபூஹுதைஃபாவின் மனைவி) சஹ்லா பின்த் சுஹைல் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, ஸாலிம் ஆண்கள் அடையும் பருவ வயதை அடைந்து விட்டார். மற்ற ஆண்கள் அறிவதை அவரும் அறிகிறார். இந்நிலையில் அவர் எங்கள் வீட்டிற்குள் வருகிறார். இதனால் (அவர் என்னைத் திரையின்றி பார்க்க நேரிடும் என்பதால் என் கணவர்) அபூஹுதைஃபாவின் மனதில் அதிருப்தி நிலவுகிறது என்று நான் எண்ணுகிறேன் என்று கூறினார்கள்.

**அப்போது நபி(ஸல்) அவர்கள் சஹ்லாவிடம் "நீ அவருக்குப் பால் கொடுத்துவிடு, இதனால் அவருக்குச் செவிலித்தாய் ஆகி விடுவாய் (உன்னுடைய கணவர்) அபூஹுதைஃபாவின் மனதில் நிலவும் அதிருப்தியும் மறைந்து விடும்" என்று கூறினார்கள். அவர் (திரும்பிச் சென்று) மீண்டும் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, "நான் அவருக்குப் பால் கொடுத்து விட்டேன். இதனால் என் கணவர் அபூஹுதைஃபாவின் மனத்தில் நிலவிய அதிருப்தியும் மறைந்து விட்டது" என்று கூறினார். (நூல்: முஸ்லிம் 2879)**

இந்த ஹதீஸில் அடிக்கோடு இடப்பட்டுள்ள பகுதியை கவனித்துப் படிக்கும் போது இது ஸாலிம்(ரலி) அவர்களுக்கு மட்டும் சிறப்புச் சலுகையாக சொல்லப்பட்டது. என்பதைத் தெரியலாம். இதனை நாம் (மே 2013 அல்ஜன்னத்தில்) இவ்வாறு விளக்கியிருந்தோம்.

"இந்த ஹதீஸில் அபூஹுதைஃபாவின் மனதிலுள்ள அதிருப்தி மாறும் என்று நபி சொல்கிறார்கள். அதுபோலவே ஸாலிமுக்கு பால் கொடுத்த பின் அபூஹுதைஃபாவின் அந்த அதிருப்தி மறைந்து விட்டது என்று அவர்களின் மனைவி திரும்ப வந்து சொல்கிறார்கள். இப்படி மனதில் அதிருப்தி நிலவும் கணவர் எவருக்கும் இம்முறையில் பால் கொடுப்பதால் மட்டும் அந்த அதிருப்தி மாறிவிடாது. எனவே இது இவர்களுக்கென குறிப்பாக சொல்லப்பட்டது தான் என்பது தெளிவா கிறது"

நபி(ஸல்) அவர்கள் மற்றும் சஹ்லா(ரலி) அவர்கள் ஆகியோரின் வார்த்தைகள் மூலம் புரிவதை நாம் மேற்கண்டவாறு எழுதியிருந்தோம்.

இது தெளிவான விஷயம் மறுக்க முடியாது. அதனால், நாம் இன்னொரு இடத்தில் இந்த ஹதீஸின் செய்தி குறித்து கூடுதல் தகவலாக "பொதுவாக இப்படி நடக்காது, ஆகவே இதை நபியவர்களின் அற்புதங்களில் ஒன்று என்று சொல்வதும் சரிதான்" என்று எழுதியதை எடுத்துக் கொண்டு வீணானவற்றை எழுதி தங்களைப் பற்றி அடையாளம் காட்டியுள்ளார்கள்!

அற்புதமா? அபத்தமா? என்று தலைப்பிட்டு, இது ஒன்றும் அற்புதம் இல்லை. **அபத்தமான செய்தியை** அற்புதமாக மாற்ற நினைக்கிறார்கள் என்று எழுதி வைத்துள்ளது ஹதீஸ். நிராகரிப்பாளர் தரப்பு.



இவர்களின் வார்த்தையைக் கவனியுங்கள் ஹதீஸைப் பற்றி **அபத்தமான செய்தி** என்று சொல்கிற அளவிற்கு இவர்களின் **'ஸின்தீக்'** தனம் பரிணாம வளர்ச்சி அடைந்து விட்டது.

**முஸ்லிம்கள் குர்ஆனுக்கு முரண்படாமல் புரிந்து ஏற்றிருக்கும் ஒரு ஹதீஸை ஒருவரால் அவ்வாறு புரிந்து கொள்ள இயலவில்லையென்றால், "எனக்குப் புரிந்து கொள்ள இயலவில்லை" என்று அறிவுத் தேடலில் ஈடுபட வேண்டும். குர்ஆன், ஹதீஸ் வழி நடந்த அறிஞர்களின் விளக்கங்களை அறிந்து கொள்ள முயற்சிக்க வேண்டும், இதற்கு மாற்றமாக "எனக்குப் புரியாவிட்டால் அது, ஹதீஸ் அறிஞர்களும் முஸ்லிம்களும் ஏற்கும் ஹதீஸாக இருந் தாலும் அபத்தம் தான்" என்று சொல்வது வழிகேடேயாகும்.**

அடுத்து இவர்கள் இங்கு புரட்டல் செய்து எழுதுவது போல், இது ஒரு அற்புதம் அதனால் இது ஸாலிமுக்கு மட்டும் உரியது என்று நாம் எழுதவில்லை. இந்த ஹதீஸின் பிற்பகுதியிலுள்ள செய்தியே அதற்கு ஆதாரமாக உள்ளது என்றும் வேறு வழியில் அறிவிக்கப்படும் இது தொடர்பான ஹதீஸும் ஆதாரமாக உள்ளது என்றும் தான், குறிப்பிட் டுள்ளோம். அதன் பின்னர் ஒரு கூடுதல் செய்தியாக, "இதை நபியவர் களின் அற்புதங்களின் ஒன்று என்று சொல்வதும் சரிதான்" என்று குறிப்பிட்டுள்ளோம் அவ்வளவுதான்.

பொதுவாக நிராகரிப்பாளர்களைப் பொறுத்தவரை நபி(ஸல்) அவர்களிடம் வெளிப்பட்ட எந்த அற்புதத்தையும் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் அவற்றை அபத்தம் என்று தான் குறிப்பிடுவார்கள். அதுபோல ஹதீஸ் நிராகரிப்பாளருக்கும் ஹதீஸை மறுத்து விடுவதால், அதிலுள்ள அற்புதம் பற்றிய செய்தியை ஏற்க முடியாமல் போகும். அவர் பார்வையில் அது அபத்தமாகத்தான் தோன்றும்!

நாம் எந்த விதத்தில் அதை அற்புதம் என்று சொன்னோம்? ஸாலிமுக்கு பால் கொடு உமது கணவர் அபூஹுதைஃபாவின் மனதில் ஏற்பட்டுள்ள அதிருப்தி மறையும் என்று நபியவர்கள் சொன்னார்கள். நபி சொன்ன படி செய்த பின் சஹ்லா (ரலி), அவர்கள் மீண்டும் திரும்பி வந்து அபூஹுதைஃபா(ரலி) அவர்களின் மனதில் ஏற்பட்டிருந்த அந்த அதிருப்தி மறைந்து விட்டது என்று சொன்னார்கள்.

பொதுவாக பெரியவருக்கு பால் கொடுத்து விடுவதனால்இப்படி நடக்காது நபி சொன்னார்கள். அது போல் நடந்தது (அல்லாஹ்வின் நாட்டப்படி) என்ற ரீதியில் தான், இதனை நபியின் அற்புதங்களில் ஒன்று என்று சொன்னாலும் சரிதான் என்று குறிப்பிட்டிருந்தோம்.

ஒரு வேளை அது அற்புதம் இல்லை என்றாலும் முஸ்லிம்கள் இந்த ஹதீஸை ஏற்றிருப்பதில் எந்த குறையுமில்லை. ஏனென்றால் சம்பந்தப்பட்ட (முஸ்லிம் 2879) ஹதீஸில் நாம் கூறும் (ஸாலிம் (ரலி) அவர்களுக்கு மட்டுமான சிறப்புச் சலுகை என்ற) செய்தி உள்ளது.

அத்துடன், இந்த ஹதீஸ்களை நம்பினால் அல்லாஹவின் சட்டத்தை உடைப்பதற்கு நபி(ஸல்) அவர்களே குறுக்கு வழியைக் கற்றுக் கொடுத்தார்கள் என்று நம்பும் நிலை ஏற்படும் என்றும் கதைத்துள்ளார்கள்.

இது தவறான கதைப்பாகும். குறுக்கு வழியை கையாள்வது என்றால் சட்டத்துக்கு நேரடியாக மாற்றம் செய்யாமல் வேறொரு தந்திர மான வழியைக் கையாள்வதாகும்.

**இங்கு நடந்திருப்பது அதுவல்ல, பெரியவர் பால் அருந்து வதால் தாய், பிள்ளை உறவு ஏற்படாது என்ற சட்டத்தை அல்லாஹ் விடமிருந்து எடுத்துச் சொன்ன நபி(ஸல்) அவர்களே நேரடியாகவே அதற்கு மாற்றமாக செயல்படச் சொல்கிறார்கள். ஆகவே இங்கு குறுக்கு வழியைக் கற்றுக் கொடுப்பதென்று ஒன்றுமில்லை. நாம் எடுத்தெழுதியுள்ள மேற்கண்ட ஹதீஸையும் இது தொடர்பான இன்னபிற ஹதீஸ்களையும் ஹதீஸ் நிராகரிப்புக் கொள்கையை கைவிட்டுவிட்டு நிதானமாகப் படித்தால் உண்மைப் புலனாகும்!**

### உறுதியான கருத்து:

ஸாலிம்(ரலி) அவர்களின் பால் குடி தொடர்பான, நபியின் உத்தரவு, அவர்களுக்கு மட்டுமே குறிப்பானது என்பதற்கு சம்பந்தப் பட்ட ஹதீஸிலேயே வாசகங்கள் உள்ளன. அத்துடன் நபி(ஸல்) அவர்களின் துணைவியருக்குள் இது தொடர்பாக நடைபெற்ற வாதப் பிரதிவாதங்கள் கூடுதல் ஆதாரமாக உள்ளன என்று எழுதியிருந் தோம். அவ்வாறு வாதப்பிரதிவாதங்களைக் குறிப்பிடும் ஹதீஸையும் எடுத்தெழுதியிருந்தோம்.



இதற்கு ஏற்கனவே பதில் சொல்லிவிட்டோம் என்று ஹதீஸ் நிராகரிப்பாளர் தரப்பு எழுதியுள்ள விஷயங்கள் மக்களை ஏமாற்றும் விதத்திலும் விஷயத்தை திசை திருப்பும் விதத்திலும் அமைந்துள்ளது.

நபி(ஸல்) அவர்களின் மனைவியரில் ஆயிஷா(ரலி) அவர்கள் தவிர்த்து மற்றவர்களெல்லாம் ஸாலிம்(ரலி) அவர்களுக்கான பால்குடி உத்தரவு அவருக்கு மட்டுமே குறிப்பானது என்று கூறும் ஹதீஸை முஸ்லிம் நூலிலிருந்து எடுத்தெழுதியிருந்தோம்.

இதை எதிர்ப்பதற்காக முஸ்லிம் நூலின் ஹதீஸ் வாசகங்களுக்கு வித்தியாசப்பட்டு, இருக்கும் அபூதாவூத் ஹதீஸை எடுத்தெழுதி, நாம் அபூதாவூத் ஹதீஸை எழுதியது போல் பதிலளித்துள்ளார்கள்.

இச்செயல் மூலம் இவர்கள் மார்க்கத்தைப் பேசுவதில் பித்த லாட்டம் செய்பவர்கள் என்பது மீண்டும் நிரூபணமாகியுள்ளது.

அதாவது ஸாலிமுக்கு நபி(ஸல்) அவர்கள் கொடுத்த சிறப்புச் சலுகையை பொதுவாக எடுத்துக் கொண்டு செயல்படலாம் என்று கருதிய ஆயிஷா(ரலி) அவர்களுக்கு உம்மு சலமா(ரலி) உள்ளிட்ட நபியின் ஏனைய மனைவியர் உறுதியான வார்த்தையில் மறுப்பளித்த தாக முஸ்லிமில் உள்ளது. ஆனால் அபூதாவூதில் யூகத்துடன் பதிலளிப்பது போல் உள்ளது.

நாம் எடுத்தெழுதிய முஸ்லிமின் ஹதீஸ்: "...மேலும் நபி(ஸல்) அவர்களுடைய மற்றத்துணைவியர் ஆயிஷா(ரலி) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் ஸாலிம்(ரலி) அவர்களுக்கு மட்டுமே இந்த முறையை அனுமதித்தார்கள் என்றே நாங்கள் கருதுகிறோம். (பால்குடிப் பருவத்தைக் கடந்த பின்) பால்குடி உறவை ஏற்படுத்தும் இந்த முறைப்படி யாரும் எங்களது வீட்டிற்குள் வந்தது மில்லை; எங்களை(த் திரையின்றிப் பார்த்ததுமில்லை என்று கூறினார்"

**நூல்: முஸ்லிம் 2883**

நாம் எடுத்தெழுதியது போல் சித்தரித்து அவர்கள் எழுதியுள்ள அபூதாவூதின் ஹதீஸ்:

அவர்கள் ஆயிஷா(ரலி) அவர்களிடம் அல்லாஹ்வின் மீதாணை யாக (இதன் விளக்கம்) எங்களுக்குத் தெரியாது. மக்களுக்கன்றி

ஸாலிமுக்கு (மட்டும்) நபி(ஸல்) அவர்கள் அளித்த சலுகையாக இச் சட்டம் இருக்கக் கூடும் என்று கூறினார்கள். **நூல்: அபூதாவூத் 1764**

ஆக ஆயிஷா(ரலி) அவர்கள் தவிர்த்த நபியின் ஏனைய மனைவியர் உறுதியான வார்த்தைகளுடனேயே தங்களின் கருத்தை கூறியுள்ளார்கள்.

**அபூதாவூதிலுள்ளதைவிட முஸ்லிமில் உள்ள ஹதீஸுக்கே கூடுதல் பலம் உள்ளது. ஏனென்றால் இரண்டும் பலமான ஹதீஸ் என்றாலும் முஸ்லிமின் அறிவிப்பாளர் தொடர் மிக பலமானாது. அத்துடன் முஸ்லிமின் ஹதீஸில், இந்த வார்த்தையை ஆயிஷா (ரலி) அவர்களிடம் கூறிய உம்முசலமா(ரலி) அவர்களே கூறிய வார்த்தையாக உள்ளது. ஆனால் அபூதாவூதின் ஹதீஸில் ஆயிஷா (ரலி), உம்மு சலமா (ரலி) ஆகியோரிடம் இந்தச் செய்தியை செவியுற்ற உர்வா(ரஹ்) அவர்கள் தமது வார்த்தையில் அறிவிப்பதாக உள்ளது.**

மேலும் அபூதாவூத் ஹதீஸில், 'இருக்கக்கூடும்' என்று தமிழாக்கம் செய்திருப்பதற்கான காரணம் மூலத்தில் உள்ள 'லஅல்ல' என்ற வாசகமாகும். இதற்கு இவ்வாறான அர்த்தம் உள்ளது என்றாலும் உறுதியைக் குறிக்கும் அர்த்தமும் உண்டு. உதாரணத்துக்கு ஹதீஸ் நிராகரிப்பாளரின் குர்ஆன் தமிழாக்கத்தை பார்க்கலாம்.

'லஅல்லகும் தத்தகூன்'(2:21) என்பதற்கு, 'தப்பித்துக் கொள் வீர்கள்' என்று மொழிபெயர்த்துள்ளார். 'தப்பித்துக் கொள்ளக் கூடும்' என்று மொழிபெயர்க்கவில்லை. **(மேலும் பார்க்க: 2:25, 2:53, 5:183)**

### மோசடி வாதம்

அடுத்து ஸாலிம்(ரலி) அவர்களின் பால்குடியை காரணமாக வைத்து மற்றவர்களுக்கும் அதை நடைமுறைப்படுத்தலாம் என்று ஆயிஷா(ரலி) அவர்கள் உம்மு சலமா(ரலி) அவர்களிடம் வாதாடியதாக வரும் ஹதீஸை (முஸ்லிம் 2881) எடுத்தெழுதிவிட்டு உம்மு சலமா(ரலி) அவர்கள் இதற்கு பதில் சொல்லவில்லை என்று எழுதியுள்ளார்கள்:

ஸாலிமுக்கு மட்டும் உரியது என்று உம்மு சலமா(ரலி) அவர்கள் கூறுவது தான் நபிவழி என்றால் உம்மு சலமா அவர்கள் ஆயிஷா(ரலி)



அவர்களின் வாதத்திற்கு எந்த விதமான மறுப்பும் தராமல் ஏன் அமைதியாக இருந்தார்கள்? இவ்வாறு கேட்கிறார்கள்.

**ஆனால் இதற்கு அடுத்து வரும் இரண்டாவது ஹதீஸிலேயே (முஸ்லிம் 2883) உம்மு சலமா(ரலி) அவர்கள் உள்ளிட்ட நபியின் மற்ற மனைவியர் ஆயிஷா(ரலி) அவர்களுக்கு மறுப்புக் கூறியதாக தெளிவாக உள்ளது. அதனை நாம் இதே கட்டுரையில் மேலே எழுதியுள்ளோம்.**

**இவர்கள் இவ்வாறு ஹதீஸ்களில் மோசடியாக எழுதுவதன் மூலம் இவர்கள் மார்க்கத்தில் செய்யும் அழிச்சாட்டியம் அளவு கடந்து போய்க் கொண்டிருக்கிறது என்பதை அறியலாம்!**

### அதிக எண்ணிக்கை:

ஆயிஷா(ரலி) அவர்கள் தவிர்த்த நபியின் மனைவியரின் கருத்தை நாம் எடுத்துக் கொள்வதால் அதிக எண்ணிக்கையை ஆதாரமாகக் கொள்வதாக குறை கூறியுள்ளார்கள்.

நாம் அதிக எண்ணிக்கையிலுள்ளவர்கள் சொல்கிறார்கள் என்பதற்காக இந்தக் கருத்தைக் கூறவில்லை. மாறாக, ஸாலிம்(ரலி) அவர்களுக்கு பால் கொடுக்க வேண்டுமென நபி(ஸல்) அவர்கள் கூறும் (முஸ்லிம் 2879) ஹதீஸிலேயேஇது அவர்களுக்கு மட்டுமே குறிப் பானது என்ற தகவல் உள்ளது. அத்துடன் ஆயிஷா நாயகி தவிர்த்த நபியின் மற்ற மனைவியரின் கூற்றும் இதனை வலுப்படுத்துகிறது என்பதே நமது கருத்து.

அதிக எண்ணிக்கையை ஆதாரமாகக் கொள்வதாக நம்மீது தவறான குற்றச் சாட்டைக் கூறும் இவர்கள் தெளிவான பெரிய தவறில் வீழ்கிறார்கள்.

அதாவது ஆயிஷா(ரலி) அவர்கள் அதிக ஹதீஸ் ஞானம் மிக்கவர், அதிக ஹதீஸ்கள் அறிவித்தவர், பெரிய சஹாபாக்களின் ஹதீஸ்அறிவிப்பிலுள்ள குறைகளைக் கண்டு பிடித்து சரி செய்தவர் போன்ற சிறப்புக்களை அடுக்கி விட்டு ஆகையினால் ஆயிஷா(ரலி) அவர்களின் கருத்துத்தான் சரி என வாதிக்கிறார்கள்.

ஆயிஷா(ரலி) அவர்களின் சிறப்புக்கள் இவர்கள் சொல்லுவதை விட இன்னும் மிக அதிகமாக உள்ளன என்பதை நாம் ஏற்றுக் கொள் கிறோம். ஆனால் அதை வைத்து இவர்கள் செய்யும் வாதம் மிகப் பெரிய தவறாகும்.

**எவ்வளவு பெரிய அறிவாற்றல் மிக்கவராகவும் சிறப்புகள் கொண்டவராகவும் இருந்தாலும் தவறான கருத்தை சொல்லிவிட வாய்ப்புள்ளது என்பது தான் மார்க்கத்தின் நிலைப்பாடு. நடைமுறை உண்மையும் அதுவே. இத்தகையவர்களை விட தகுதியில் குறைந்தவர்கள் இவர்களுக்கு மாற்றமாக எதைச் சொன்னாலும் அது தவறாகத்தான் இருக்கும் என்று எண்ணுவது மார்க்கம் காட்டித்தந்த வழி முறைக்கு எதிரானதாகும்.**

**இவர்களின் இது போன்ற வாதங்கள் மூலமாகத்தான் மத்ஹபு பிடிவாதங்களும் கண்மூடித்தனமான பின்பற்றலும் தோன்றி வலுவோடு இருந்து கொண்டிருக்கின்றன.**

**இது விஷயத்தில் குர்ஆன் ஹதீஸ் வழி நடக்கும் முஸ்லிம் களின் நிலைப்பாடு: இது விஷயத்தில் அன்னை ஆயிஷா(ரலி) அவர்களுக்கு மாற்றுக் கருத்துக் கொண்ட நபியின் மற்ற மனைவியரை விட அன்னை ஆயிஷா(ரலி) அவர்களே மிகச் சிறந்தவர், ஆனால் இந்தப் பிரச்சனையில் சரியான கருத்து நபியின் மற்ற மனைவியரிடமே உள்ளது.**

முன்பு நாம் சொன்னபடி சம்பந்தப்பட்ட ஹதீஸிலேயே இச்சலுகை ஸாலிம்(ரலி) அவர்களுக்கு மட்டும் உரியது என்ற தகவலைக் கொண்ட வாசகங்கள் உள்ளன.

இன்னொரு விதத்திலும் நாம் இதை உறுதிப்படுத்தலாம்.

ஆயிஷா(ரலி) அவர்கள், பெரியவர் பால் குடிப்பது மூலம் தாய், பிள்ளை உறவு ஏற்படும் என்று கருதுவதற்கு ஆதாரமாகக் கொள்வது, சஹ்லா(ரலி) அவர்களுக்கு நபி(ஸல்) அவர்கள் இட்ட கட்டளையைத் தான். சஹ்லா(ரலி) அவர்களுக்கு நபி(ஸல்) எப்போது அந்த கட்டளையை இட்டார்கள்? சஹ்லா(ரலி) அவர்கள் கணவர் அபூஹு தைஃபாவிற்கு அதிருப்தி ஏற்பட்ட போது! ஆக அடிப்படை பிரச்சினை



கணவருக்கு ஏற்பட்ட அதிருப்திதான். அதற்குத் தான் சஹ்லா(ரலி) அவர்கள் தீர்வு கேட்டார்கள். **அந்த கணவரின் அதிருப்தியை மாற்றத்தான்** நபி(ஸல்) அவர்கள் இந்தத் தீர்வை சொன்னார்கள்.

**இது பொதுவானது என்றிருந்தால் நபி(ஸல்) அவர்கள் அந்த சஹாபாக்கள் சமுதாயத்துக்கு பொதுவாக சொல்லியிருப்பார்கள். அந்த சமூகத்துக்குள் பொதுவாக இந்த நடைமுறை இருந்திருக்கும். நபியின் மற்ற மனைவியர் இதை மறுப்பதற்கு எந்த முகாந்திரமும் இருந்திருக்காது. சற்று யோசித்துப் பார்க்க வேண்டும்! நபி(ஸல்) அவர்கள் பால் கொடு என்று சொன்னதை எந்த அர்த்தமுமில் லாமல் இது ஸாலிமுக்கு மட்டுமே உரியது என்று மற்ற மனைவியரெல்லாம் எப்படிச் சொல்வார்கள்?**

அடுத்து, ஒரு கேள்வி இருந்து கொண்டிருக்கிறது. எதற்காக ஸாலிமுக்கு மட்டுமென்று நபி(ஸல்) அவர்கள் இப்படி உத்தரவு போட வேண்டும்? என்பது தான் அந்தக் கேள்வி!

**காரணமிருக்கிறது, வளர்ப்பு மகன் பெற்ற மகன் போல என்ற நிலை ஜாஹிலிய்யாக் காலத்திலிருந்து தொடர்ந்து இருந்து கொண்டிருக்கிறது. அல்லாஹுதஆலா திடீரென அந்த நிலையை ரத்து செய்து சட்டம் போடுகிறான். (குர்ஆனில் சூரத்துல் அஹ்ஸா பிலுள்ள வசவனத்தின் மூலம்) அப்போது அல்லாஹ்வின் உத்தரவுக்கிணங்க வளர்ப்பு மகன்களாயிருந்தவர்கள் எப்படி பிரிந்து இருக்க வேண்டுமோ அப்படி இருந்து கொள்கிறார்கள். ஆனால் ஸாலிம்(ரலி) அவர்களுக்கு அப்படி பிரிந்து செல்ல வழி இருக்கவில்லை. அத்துடன் சஹ்லா(ரலி) அவர்களிடம் ஸாலிம் (ரலி) மீதுள்ள தாய்ப்பாசம் நீடித்துக் கொண்டிருந்தது. அதே நேரத்தில் அல்லாஹ்வின் புதிய கட்டளையை நிறை வேற்ற முடியாததால் அபூஹுதைஃபா(ரலி) அவர்களுக்கு அதிருப்தி ஏற்பட்டது. இந்த இக்கட்டான சூழ் நிலைக்குத் தான் சஹ்லா(ரலி) அவர்கள் நபியிடம் தீர்வு கேட்டார்கள். நபியும் தீர்வு சொன் னார்கள்.**

அல்லாஹ்விடமிருந்து இந்த புதிய சட்டம் துவக்கமாக வந்த நேரத்தில் தான் இத்தகைய நிர்பந்தச் சூழ்நிலை ஏற்பட்டது. அந்தச்

சட்டம் நடைமுறைக்கு வந்து காலம் கடக்கும் போது இத்தகைய சூழ்நிலை ஏற்படாது.

இதுவே ஸாலிம்(ரலி) அவர்களுக்கு மட்டும் இந்த சிறப்பு உத்தரவு இடப்பட்டதற்கான காரணமாகும்.

இந்த ஹதீஸ் குறித்து நாம் இத்துடன் நான்கு இதழ்களில் பார்த்துள்ளோம். அவற்றின் சாராம்சம், நபி(ஸல்) அவர்கள் சஹ்லா(ரலி) அவர்களிடம் ஸாலிம்(ரலி) அவருக்கு பால் கொடுக்கும் படி கூறியது பாலை எடுத்துக் கொடுக்கச் சொன்னது தானே தவிர நேரடியாக அல்ல. அத்துடன் தகுந்த ஆதாரத்தின் அடிப்படையில் இது ஸாலிம்(ரலி) அவர்களுக்கு மட்டும் வழங்கப்பட்ட சிறப்புச் சலுகையாகும்.

இதை நடைமுறைப்படுத்துவது எப்படி என்பதில் கருத்து வேறுபாடு ஏற்பட்டு நபியின் மனைவியருக்கு மத்தியிலேயே வாதப் பிரதிவாதங்கள் நடந்திருப்பது இந்தச் செய்தி உண்மையானது என்பதற்கு பலமான ஆதாரமாகும்.

இந்த ஹதீஸ் ஒரு வழியாக மட்டும் அறிவிக்கப்படும் ஹதீஸ் அல்ல. (ஒரு வழியாக வந்தாலும் ஆதாரப்பூர்வமானதென்றால் ஏற்றுத் தான் ஆக வேண்டும்) வெவ்வேறு வழிகளில் அறிவிக்கப்படும் பலமான ஹதீஸாகும்.

1. முஸ்லிம் 2878, 2879, 2880 ஆகிய மூன்று ஹதீஸ்களும் ஆயிஷா(ரலி) அவர்களிடமிருந்து அல்காசிம் பின் முஹம்மது கேட்டு அவர்களின் மாணவர்களுக்கு அறிவித்து அவர்கள் வாயிலாக பல வழிகளில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

2.முஸ்லிம் 2881, 2882 ஆகிய ஹதீஸ்கள் இந்த சம்பவம் தொடர்பாக ஆயிஷா(ரலி) அவர்களுக்கும் உம்மு சலமா(ரலி) அவர் களுக்கும் நடந்த உரையாடலைச் செவியுற்ற நபி(ஸல்) அவர்களின் வளர்ப்பு மகள் ஸைனப்பின்த் அபிசலமா(ரலி) அவர்கள் ஹுமைத் பின் நாஃபிஉ அவர்களுக்கு அறிவித்ததாகும்.

3.முஸ்லிம் 2883வது ஹதீஸ், இந்த சம்பவம் தொடர்பாக ஆயிஷா(ரலி) தவிர்த்து நபியின் மற்ற மனைவியரின் நிலைப்பாடு



என்ன என்பதை உம்மு சலமா(ரலி) அவர்கள் கூறியதாகும். இதை ஸைனப் பின்த் அபீசலமா(ரலி) அவர்கள் அபூஉபைதா பின் அப்தில்லாஹ் அவர்களுக்கு அறிவித்துள்ளார்கள்.

4.அபூதாவூத் 2063 நஸாயி 3224 ஆகிய ஹதீஸ்கள் ஆயிஷா (ரலி), உம்மு சலமா(ரலி) ஆகிய இருவரிடமிருந்தும் உர்வாபின் அஸ்ஸுபைர்(ரஹ்) அவர்கள் இதே செய்தியை அறிவிப்பதாகும்.

ஆக இந்த ஹதீஸ் இத்தனை அறிவிப்புக்களில் அறிவிக்கப்பட்டு பிரபலமான பல ஹதீஸ் நூல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளதாகும். இதை மறுப்பது, மிகத் தெளிவாகத் தெரிந்த உண்மையை மறுப்பதாகும்.

இந்த ஹதீஸை அறிவித்த, பதிவு செய்த இமாம்கள் உள்ளிட்ட முஸ்லிம்கள் அனைவரும் குர்ஆனுக்கு முரண்படாமல் புரிந்து வருகிறார்கள். பொதுவாக மார்க்க ஆதாரங்களை அலட்சியத்துடனும் பேணுதலின்றியும் அணுகக் கூடியவர்கள் தான் தவறான வாதங்களை வைத்து இதுபோன்ற ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களை நிராகரிக்கி றார்கள். அல்லாஹ் இந்த சமுதாயத்தை ஹதீஸ் நிராகரிப்புத் தீங்கி லிருந்து காப்பாற்றுவானாக!

இதுவரை இத்தொடரில், ஹதீஸ் நிராகரிப்பாளர் தனது திருக்குர்ஆன் தமிழாக்கத்தில் (விளக்கக் குறிப்புப் பகுதியில் எண் 357ல்) “நபிகள் நாயகத்துக்கு சூனியம்” என்ற தலைப்பில் சூனியம் தொடர்பான ஹதீஸை தான் நிராகரிப்பதை வலுப்படுத்துவதற்காக நிராகரித்துள்ள நான்கு ஹதீஸ்களின் விளக்கத்தைப் பார்த்துள்ளோம். ஸாலிம்(ரலி) அவர்களின் பால்குடி, பத்து தடவை பால் குடித்தால் தான் தாய்பிள்ளை உறவு ஏற்படும் என குர்ஆனில் இருந்த வசனம் மாற்றப்பட்டது. மூஸா(அலை) மலக்குல் மவ்த்தை அடித்தது, சுலைமான்(அலை) அவர்கள் நூறு மனைவியருடன் தாம்பத்ய உறவு கொண்டது ஆகியவை தொடர்பான ஹதீஸ்களே அவை.

இந்நான்கு ஹதீஸ்களுக்கும் மே.2013 இதழிலிருந்து சரியான விளக்கத்தை வழங்கி வருகிறோம். இவற்றில் ஸாலிம்(ரலி) அவர்கள் தொடர்பான ஹதீஸுக்கு மட்டும் ஹதீஸ் நிராகரிப்பாளர் ஆலோசகராக இருந்து இயக்கிக் கொண்டிருக்கும் ஏகத்துவக் கொள்கை பெயர்

தாங்கும் மாத இதழில் (ஜுன், 2013) தப்பும் தவறுமாக வேறொருவர் பெரியல் மறுப்பு எழுதப்பட்டிருந்தது. அதற்கு இந்த இதழுடன் சேர்த்து மூன்று இதழ்களில் நாம் முறையான விளக்கத்தை கொடுத்திருக்கி றோம்.

மற்ற மூன்று ஹதீஸ்கள் விஷயத்தில் ஹதீஸ் நிராகரிப்பாளர் நமக்கு மறுப்பளித்து எதுவும் எழுதவில்லை காரணம்?

அல்லாஹ்வின் கிருபையால், ஹதீஸ் நிராகரிப்பாளரின் இந்த நிராகரிப்புக்கு இதுவரை முஸ்லிம்கள் தரப்பிலிருந்து கொடுக்கப்பட்ட மறுப்புக்களில் மிக வலுவானதாகவும் தெளிவான ஆதாரங்களைக் கொண்டதாகவும் நம்முடைய விளக்கம் அமைந்திருந்தது தான் காரணம் அல்லாஹம்துலில்லாஹ்.

இதனால் இந்த ஹதீஸ் நிராகரிப்பு வாதம் நிர்மூலமானது. ஆனாலும் உண்மையை ஏற்க மனமில்லாத ஹதீஸ் நிராகரிப்பாளர் நமது விளக்கங்களை கண்டு கொள்ளாமல் இருந்து விடுவதே தனக்கு உசிதம் என்று மௌனமாக இருக்கிறார்.

இவர் தந்திரமாகச் செயல்பட்டு தப்பித்து விடுவதாக கற்பனை செய்து கொண்டிருக்கிறார். ஆனால் தவ்ஹீத் வாதிகள் இவருடைய தீய தந்திரங்கள் பற்றி தெரிந்து கொள்வதற்கு நல்ல வாய்ப்பாக அமைந்து விட்டது.

எந்தத் தந்திரத்தின் மூலமும், ஹதீஸ் நிராகரிப்பு எனும் வழிகேட்டை திருக்குர்ஆன் தர்ஜமாவிலேயே பரப்பிய குற்றத்திற்கு அல்லாஹ்விடமிருந்து தப்பிக்க முடியாது என்று எச்சரிக்கிறோம். அல்லாஹ்விடம் மன்னிப்புக் கேட்டு திருந்தினாலே தவிர! ஹதீஸ் நிராகரிப்பாளரின் தீங்கிலிருந்து இந்த சமுதாயத்தை காக்க அல்லாஹ்வே போதுமானவான்!